கடவுள் துணை



# ஞானமிர்தம்

அங்கதேசத்தின்கண் பங்கமின்றி மநுநீதி தவறாமல் பொய்யென்னும் பேயைப் போக்கி மெய்யென்னும் விரதம் பூண்டு செல்வத்தினால் ஆணவப் படாமல் தருமத்தை மறக்காமல் நீதி குன்றாமல் நெறிக்கோல் சாயாமல் ஏழைகளுக்கிடர் விளைக்காமல் சத்துரு ஜெயம் பெற்று சமயங்களிற் பேதம் வைக்காமலுற்று நீதியின்படி யொழுகி கோபமாற் சல்யங்களைப்போக்கி சமர் வந்த வேளையிலிளைக்காமல் போர் முகத்திற் புறங் கொடுத் தோடாமல் தெய்வ பூஜை தவறாமல் ஆலயம் குளம் சத்திரம்சாவடி நந்தவன முதலானவைகள் பிரதிஷ்டை செய்து, மகரகுண்டல ஆரகேயூர கடக கங்கண முதலான ஆபரணங்க ளணிந்து, மல்லிகை முல்லை இருவாக்ஷி ஷெண்பக முதலிய பரிமள மிகுந்த நறுமலர் மாலைகள் சூடி, சந்தனம் புனுகு ஜவ்வாது கஸ்தூரி பூசி, நவரத்தினத்தாலிழைத்த சிம்மாதனத்திலிருந்து அரசாண்டு வந்த சிருங்கராஜ னென்பவர் சந்ததியின்றி மனவருத்த மடையுங்கால் அவர் ஆதீனத்தி லிருந்த சகல விப்பரர்களும் இன்

ஒரு விவாகஞ் செய்தால் புத்திரபாக்கியங் கிடைக்குமென்று விளம்பினர். அதை யருகிருந்து செவியுற்ற சுந்தர ரென்னு மோர் சன்னியாசி அரசே? நீர் அவ்விதஞ் செய்வது பின்னுந் துன்பத்தையே தருமாதலால் சர்வாந்திரியாமியாகிய ஈசனருளிருக்கின் எவ்விதத்தாலும் புத்திர பாக்கியங் கிடைக்கும். இதற்காக ஒருவன் எனக்கு விலங்கு வேண்டாம் குட்டையில் மாட்டு யென்று சொல்லியதுபோல் இப்பொழு தனுபவிக்கும் மனக்கஷ்டத்தைத் தீர்க்க வெண்ணி ஒரு காரியத்தைச் செய்து பெருங் கஷ்டத்தை வருவித்துக் கொள்வது மதியீன மல்லவா! நாம் நினைத்தபடி முடிவது கஷ்டமே. எல்லாம் ஈசன் செயல். அவர் மகிமையைப் பற்றி ஆயிர நாவுடைய ஆதி சேஷனும் சொல்ல முடியாதிருப்பினும் என் சிற்றறிவுக் கெட்டிய பிரகாரஞ் சொல்வதைச் சற்று கவனிப்பீராக.

சுத்தவேதாந்த பூரணி

வித்தின்றி விருக்ஷமில்லைப் பலனுமில்லை
விளக்கின்றி காந்தியில்லை யனலுமில்லை
முத்தின்றி யெண்ணெயில்லை மினுக்குமில்லை
முடிவின்றி துவக்கமில்லை மின்ன லின்றி
சப்தமிடி மிடியுமில்லை மாரியில்லை
தாயின்றிப் பிள்ளை யில்லை ஜநக மில்லை
கர்த்தனின்றி யுலகமில்லை யொன்றுமில்லை
கருதிப்பார் காரணனைக்கருதிப்பாரே.

அவர் அணுவாகவும் மேருவாகவும் விளங்குபவர். பஞ்ச பூத மூலமாயுலாவுபவர். முற்று முணர்ந்து பற்றற்றவரிருதயத்திற் குடியிருப்பவர். நான்குவேத நாவலர். பிரணவாக்ஷரப் பொருளானவர். திரிபுரதகனஞ் செய்தவர். ஏழைபங்காளர்.

நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாசம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் அஷ்டமூர்த்தியாயும்; பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகாதேவன் என்னும் நான்குருவாயும்; சிவன், சத்தி, விந்து, நாதமென்ற நான்குருவாயும்; சிருஷ்டி, திதி, சங்காரம், திரௌபவம், அனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் சதாசிவ அருவாயு முருவாயு மிருந்து நடத்துபவர்.

### கந்தரனுபூதி

"உருவா யருவாயுளதாயிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்
கருவாயுயிராய்க் கதியாய் மதியாய்க்
குருவாய் வருவாயருள்வாய் குகனே."

### பாகவதம்

"ஆதியி லொருத்தனாகியந்தமென்றுரைக்கும் போது
பேதயிலொருவனாகி யிமையுமின்னடுவிற்பேத
மோதுயர் பலவு மாகிவுரைவபோலுறைவா யுற்ற
ஜோதியின் விளையாட்டெல்லாஞ் சொல்லயார் வல்லார்மாதே'

### இராமாயண வெண்பா

"உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெருத்தலும் நீக்கலு நீங்கலா
அலகிலா விளையாட்டுடையாரவர்
தலைவ ரன்னவர்க்கே சரணங்களே."

### ஔவையார்

"ஐயமிடு மினற நெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே யாயினும் நீரிட்டுண்மின்—தெய்வம்
ஒருவனே யென்று யுணரவல்லீரேல்
அருவினைகளோந்து மறும்"

என்றதால் அவற்றைக் கற்றூர் கல்லார் மற்றோ ரெல்லா ரும் சத்விசய பத்தியுடன் திரிகரண சுத்தியாய் வழிபடக் கடமைப் பட்டவர்களா யிருக்கிறோம். ஆயினும் அவர்மானி டர்களின் அபாத்திரத் தன்மையைப் பாராட்டாமல் சர்வதா நன்மை செய்தே காப்பாற்றி வருகிறுர்.

ஆனதால் எல்லாம் அவன் செயலென்று நினைத்திருப் பீராகில் நடக்கிறது தானே நடக்குமென்று சுந்தர ரென் னுஞ் சன்னியாசி சொல்ல, அரசன் விவாகச் சங்கதியைப் பற்றிக் கவனியாதது போலிருந்து விட்டான்.

அதன் பின் ஒருவாரம் பொறுத்து காகத்தக் கொப் பான விப்ரர்களிதை யறிந்து மறுபடியும் இராஜனண்டை போய் பின்வருமாறு பிரசங்கித்தார்கள்.

ஒன்றைச் செய்யவேண்டுமென்று நினைத்தால் அத ற்கு வேண்டிய முயற்சிகள் பலவுஞ் செய்ய வேண்டும். அல் லாமல் சும்மா விருந்தா லொன்றும் நடவாது.

குறள்

(1) "குடிமடிந்து குற்றம் பெருகு படிமடிந்து
மாண்டவு ஞற்றிலவர்க்கு"

(2) "குடியாண்மையுள் வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக்கெடும்."

அவ்விதஞ் செய்தாலும் வினையின் விளைவு மிருந்தா லொழியக் கைகூடாது. முயற்சி யில்லாவிட்டால் மேல் வினைக்கு ஆதரவில்லை.

குறள்

"முயற்சி திருவினையாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்திவிடும்."

காரியமும் கை கூடாது. அப்படி யிருந்தால் மேல் வினை என்னமாய்ப் போகுமென்று கேட்டால் பளிச்சென்று மின்னி மறைந்து போகும் மின்னல் போல் அதன் பலனைக் காட்டி மறையும்.

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" யென்று சொல்லப்பட்டிருக்கிறது போல தன் தன் முயற்சிக்குத் தகுந்தாற் போல் இருவினையு முண்டாகும். இதில் முயற்சி யானது காரியம். வினை யென்பது காரணம். காரியமின்றிக் காரணங் கிட்டாது. உதாரணமாக முற்றிய வித்தாயிருந்தாலும் நன்றாய் உரமுதலியவைகள் போட்டு நல்ல நிலத்திற் பயிர் செய்தால் நல்ல பலனைக் கொடுக்கும். ஆகையால் முயற்சிக்குத் தக்கபடி பிரகாசிக்கும். முயற்சி யில்லாவிட்டால் நல் வினை யிருந்தாலுங் கெட்டுப்போகும்.

குறள்

"துன்பமுறவறினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை."

முன் சொல்லியதுபோலதிக முயற்சியிருந்து வினை யில்லாமற் போனால் அதிக பலனைப்பெற முடியாது. முயற்சியும் வினையும் சமத்துவமாயிருந்தால் மெத்தப் பிரக்கியாதி யை உண்டாக்கும்.

குறள்

"பொறியின்மையார்க்கும் யழியன்றறிவந்
தாள் வினை யின்மைபழி."

இதைக்கொண்டு காரியமின்றிக் காரணமும் காரணமின்றிக் காரியம் ஆகாதென்பதை திட்டமாய் அறிந்துகொள். அது யெதைப்போ லென்றால் மண்ணெண்ணெய் ஊற்றித் திரிபோட்டு யேற்றிய விளக்கானது நல்ல பிரகாசத்தைக் கொடுக்கிறது. அதை வெவ்வேறாய்ப் பிரித்து எண்ணெய் அல்லது திரியில் தீப்போட்டால் சற்று மங்கின வெளிச்சத்தைக் கொடுத்துச் சீக்கிரத்தில் அணைந்து போகிறதைப் பார்க்கிறோம். முன்னிரண்டும் சேர்ந்திருந்தபோது தீபம்பிரகாசித்தது போல முயற்சியும் வினையும் சமமாயிருக்குங் காலத்தில் அதிகப் பலன் கிடைக்கும். எண்ணெயும் திரியும் வெவ்வேறாக யிருக்கும்போது தீப்பட்டுச் சற்றுநேரம் வெளிச்சங் கொடுத்து பின்பு அணைந்து போகிறது போல முயற்சியில்லாமல் வினையும் வினையில்லாமல் முயற்சியு மிருக்குமானால் அதற்குரிய பலனைக்காட்டி மறைந்துபோமென்பதை அறியக்கடவீர்.

### திருக்குறள்

"ஊழையு முப்பக்கங் காண்பருக வின்றித்
தாழாது ஞற்று பவர்"

### நீதி நெறி விளக்கம்

"உறுதி பயப்பக் கடைபோக வேலு
மிறுவரை காறு முயல்ப—விருமுயிர்க்கு
மாயுண் மருந்தொழுகா தீ தன்றேலல்லனபோ
லாவன வு முண்டுசில."

"முயலாது வைத்து முயற்றின்மையாலே
யுயலாக வூழ்திரத்த வென்ஞர்—மயலாயு
மூற்ற மிறுவிக்க முறாண்மை காண்குமென்
றேற்ற பொறிகாண் முகத்து."

சோமேசர் முது மொழி வெண்பா

தக்கனுனையெள்ளி மகஞ்சாகும்போதெண்ணி யெண்ணி
துக்க முற்றவனுவதெனை சோமேசா—வெக்காலும்
எற்றென்றிரங்குவ செய்யற்கச் செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நன்று."

இவ்வாறு போதித்து மறுபடியும் விவாகத்தைப் பற்றிப் பேச வாரம்பித்தார்கள். அப்பொழுதரசன் அவர்களை நோக்கி நாமொருவாறு சம்மதிப்பினும் நமக் கேற்ற மணமகள் கிடைப்பதரிதா யிருக்கு மென்று யோசிக்கிறே னென்றுன். உடனே விப்ரர்களி லொருவன் தங்களரசாக்ஷிக்குள் பட்ட வினேதபுரி அரசனுக்கு யெளவர்னமான ஒரு புத்திரியிருக்கிருள் அக்கன்னிகை தமக்கேற்றவளென விளம்பினுன். அதற்கரசன் அவ்வரசனைக் கேட்டுச் சம்மதியா விடில் நமக்குக் குறை வல்லவோ வென்றுன். சோதிடன் அருளிலும் பொருளிலும் குறை வின்றி கரையற்ற நிரைந்த சமுத்திரம் போல் அழியாத கீர்த்தியுடனொரு மரசராகிய தமக்கு விநோத புரியரசன் தன் கன்னிகையைக் கொடுக்க தடையொன்று மிரா தென்பது திண்ணம். அதைப்பற்றி யோசிக்க வேண்டியதில்லை யென்று சொன்னுன். அரசன் ஆனுற் சரி உங்க லிளிருவரும் மந்திரியுமாகப்போய் அவ்வரசனைக் கேட்டு வாருங்களென்று ஆக்ஞாபித்தான்.

இனி அக்கன்னிகையைப் பற்றி விசாரிப்போம். விநோத புரியை யரசாளும் திசில னென்னு மரசனுனவன் இரண்டு ஆண்மகப்பேற்றுல் களிப்படைந் திருக்கையில் ராஜஸ்திரியாகிய தின மணி யென்பவள் பெண் சிசுவில்லாமை பற்றி விசனமுற்று அனேக விதமான தபசுகள் புரிந்து வந்தனள். அதற்குப்பின் ஒருவருடங் கழித்து கற்பமாகி

தசமதியுஞ் சென்று ஒரு பெண் பிறந்தது. உடனே ஜோதிடர்களைக் கூப்பிட்டு ஜாதகம் கணிக்கும்படி சொன்னாள். அவ்விதம் ஜோதிடர்கள் சாஸ்திரவாராக்ஷிசெய்து பார்க்கையில் இப்பெண்ணுக்கு பதினைந்தாவது வயதுக்கு மேல் தகப்பனிராஜ்யத்திற் கழிவும், புருடனிராஜ்யத்தில் மனக்கஷ்டமும், இச்சாதகி காராகத்தி லிருக்கும்படியாயும் நேருமென்று சொல்ல, அதைக்கேட்ட தினமணியானவள் இதை வெளியிற் சொல்லவேண்டாமென்று ஜோதிடர்களுக் காயிரம் பொன் கொடுத்தனுப்பி விட்டு அரசனுக்குப் பெண் பிறந்ததைத் தெரிவித்துப் பெயரிடவேண்டு மென்று சொல்லியனுப்பினாள். அவ்வித மரசன் மந்திரிமுதலான பந்துக்களனைவரையு மழைப்பித்து பெண்ணுக்கு அலந்தலை எனப் பெயரிட்டார்கள். ஆனாலப்பெண் ஜாதகத்திற்குத் தக்கபடியே பெயருமமைந்தது. அப்பெண் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து ஐந்து பிராயம் வந்தவுடன் பள்ளிக்கு வைக்க பெண்ணானவள் ஆறு சாஸ்திரம் ஆகம புராணாதிக ளெல்லாம் பன்னிரண்டு வயதிற்குள் கற்றுக்கொண்டாள். பின்பு அலந்தலையின் கல்விப் பயிர்ச்சியையும் அழகையுங்கண்டு தாயாகியதினமணி மனவருத்த முற்றிருந்தாள். இதைக்கண்ட அவள் தாதிகளிலொருத்தியாகிய நவமணி யென்பவள் இராஜ நாயகி! இன்று நீரிவ்வளவு வாடினமுகத்துட னிருப்பதின் காரணமென்னதென்று வினவ:.சகியே என்னாரத்துயரத்தை எதென்றெடுத்துரைப்பேன். நினைக்க நினைக்கத் துக்கம் பெருகுகிறதேயன்றி குறைதலுக்கிடத்தைக் காண்கிலேனே, என் பெண்ணுக்கு இவ்வளவு அழகையும்புத்தியையுங்கொடுத்த கடவுளானவர் நடுவே ஒரு பிழையைக் கற்பித்துவிட்டனரே. ஹா! என்னசெய்வேன் என்னமாய் முடியுமோ வென்று

ஆராத்துயருடன் சொன்னாள். அவ்விதஞ் சொல்வதைக் கேட்ட நவமணி யென்பவள் ஆதியில் மிருகண்டேயருக்கு வெகுநாளாய் புத்திரசந்தான மில்லாமலிருக்க அநேக தவ ஞ்செய்தபின் கோடிசூரியப் பிரகாசம்போல ஒரு ஆண்மக வடைந்தனர்.

அம்மகவானது பதினாறு வயதுவரை இருக்குமென்று தெய்வகட்டளை கிடைத்திருந்ததைப்பற்றி கிலேசமுற்றிருந் தார்கள். அப்பிள்ளைக்கு வயதுவர தாய் தந்தையரின் கிலே சத்தைத் தீர்க்கவெண்ணி அநேக ஸ்தலங்களுக்குச்சென்று தன் ஆயுளைத் தீர்க்காயுளாய் வாங்கிக்கொண்டு வந்தனன். அதுபோல நமது பெண்மணியா லுண்டாகப்போகிற துன் பத்தை நம்மூர் வடக்கெல்லையிலுள்ள பத்திரகாளியம்மை யின் கிருபாகடாக்ஷம் பெற்றால் நீக்கிக்கொள்ளலா மென்று சொல்லினள். அதைக்கேட்ட தினமணி அன்றுமுதல் சதாவும் அப்பத்திரகாளியம்மனை தியானித்துக்கொண்டு சுக் கிரவாரந்தோறுங் காளியினாலயஞ்சென்று பூஜை நைவேத் திய முதலானதுஞ் செய்து பூஜித்துவந்தனள். இராஜபத் தினி இவ்விதஞ்செய்து வருவதை யறிந்து அரசனும் அவன் குமாரனும் இதன் காரணம் வினவ, அவள் உள்ளதையுள்ள படி சொல்லி மனவருத்த மடைந்தாள். அதைக்கேட்ட அவர்கள் திகிலடைந்து என்ன நேரிடுமோவென்னும் பய பேதியுடன் தவறாமல் அம்மனுக்கு பூஜை செய்துவரும் படி சொன்னார்கள். அதின்படியே இரண்டுவருஷக் காலம் நடந்து வர ஒருநாள் பத்திரகாளியானவள் பிரசன்ன மாகி காரண மென்ன வென்று கேட்க இராஜ பத்தினியா கிய தினமணியானவள் பத்திர காளியை வலம் வந்து நமஸ் கரித்து தன் குமாரியால் உண்டாகப்போகிற துன்பத்தை நீக்கித் தரவேண்டு மென்று சொல்லினள். அதை கேட்ட

பத்திர காளியானவள் நல்லது நீ யொன்றுக்கு மஞ்சவேண் டாம். நான் காப்பாற்றித் தருகிறேன். நீமட்டும் பிரதி சுக் கிரவாரந் தோறும் என்னலயம் வந்து போய்க் கொண்டிரு வென்று சொல்லி விட்டு மறைந்து போயினள். அதன் பின் தினமணி சற்று தைரியத்துடனிருந்தாள். இது நிற்க! முன்னல் சிருங்க ராஜனு லனுப்பப்பட்டவர்கள் விநோத புரி வந்து சேர்ந்து ராஜனைக்காண அவர் யாது காரணம் பற்றி வந்தீர்கள் யென்று வினவலானர். அது கேட்ட மந்திரியானவன் எமதரசனுக்கு உமது குமார்த்தியை மணம் புரியத்தக்க வெண்ணத்துடன் தங்கள் மனோபாவத் தை அறிந்து நிச்சயித்துச் சொல்ல வேணுமென்ற நோக்க த்துடன் வந்தோமென; அதைக் கேட்ட திசில ராஜனனவன் அடங்கா மகிழ்ச்சியுடன் மந்திரியைப் பார்த்து என்னையும் என் குடும்பங்களையும் இவ்விதக் கன்னிதப்படுத்தி என் குமாரியை மணஞ்செய்து கொள்ளத்தக்க யெண்ணத்துடன் என்னை ஒருபொருளாகக் கருதிகேட்டனுப்பிய உமது அரச னது வாக்கிற்கு இரண்டகமன்று. அவர் மனோ பீஷ்டப்படி நடத்திக்கொள்வதில் யாதொரு தடையுமில்லை யென்றனன். உடனே இராஜனிடஞ் சிலவு பெற்றுக்கொண்டு இவட மிரு ந்து போன மந்திரியும் விப்ரர்களுந்தன் பதியை யடைய உத் தேசித்து பிராயணப்பட்டனர்.

இதற்கு மத்தியில் சுந்தரரென்பவர் இராஜனைக் கான வந்தவிடத்தில் தான் விநோதபுரிக்கு மந்திரியை யனுப்பின விபரத்தைச் சொன்னர். ஆகா என்ன விநோதம் என்ன காரணத்திற்காகவோ இவ்வளவு துரிதமாக இம்மணம் நடக் கப் போகிற தென்று சொல்லி சுந்தரர் பெரு மூச்சு விட்டு சற்று நேரம் பேசாமலிருந்தனர். இராஜனனவர் சன்னியாசி யைப்பார்த்து நான் விநோத புரிக்கு ஆள் அனுப்பி யிருக்

கிறேனென்று சொன்னதும் தங்கள் முகம் வாடி பெருமூச்சு விட்டு சற்று நேரம் சும்மாயிருந்து விட்டீர்களே? அதன் விபரமென்னதென்று கேட்க, இப்பொழுதொன்றுஞ் சொல்லத் தோற்றவில்லை இன்னும் கொஞ்சநாள் பொறுத்துச் சொல்லுகிறேனென்று எழுந்து போய் விட்டனர். இவ்விதம் சுந்தரர் போனதைப்பற்றி இராஜன் ஆலோசித்துக் கொண்டிருக்குங்கால் விநோதபுரிக்குச் சென்ற மந்திரிவிப்ரர்களுடன் எதிரிற்றோன்றி நின்றார்கள். இராஜன் மந்திரியை நோக்கி முதலில் யோகக்ஷேமங்களையும் பின்பு கருதிப்போன விஷயத்தையும்பற்றி வினவலானான். அரசே! மன்னன் சொல்லுக்கு மறுசொல்லேற்படுமோ திகிலராஜன் அதிகமனக் களிப்புடனொப்புக்கொண்டான் யென்று மந்திரி சொன்னான். அதற்கு இராஜன் சந்தோஷவார்த்தை யாடாமல் நல்லதென்று பேசாதிருந்தனர்.

உடனே விப்ரர்கள் பத்திருபது நாளைக்குள்ளோர் முகூர்த்தநாள் நிச்சயித்துக்கொண்டு இராஜனுக்குத் தெரிவிக்க அவர் மந்திரியைப்பார்த்து அதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் சீக்கிரஞ் செய்யவேண்டுமென்று ஆக்ஞாபித்து விட்டார். அவ்வுத்திரவின்படி விநோதபுரிக்குப் பெண்ணழைத்து வரும்படி சில பிரபுக்களை அனுப்பிவிட்டு அரண்மனை முதலான இடங்களை பந்தற் போட்டு அலங்காரஞ் செய்யவு முத்திரவுகொடுத்தார். இதையறிந்த இராஜபத்தினியானவள் விசனமுற்றிருக்க அன்றிராத்திரி இராஜன் பள்ளியறையைச் சேர்ந்தனன். அப்பொழுது இராணியே நாதா? இதென்ன இருந்தாப்போலிருந்து இக்காரியஞ் செய்ய மனந்துணிந்தது. காமப்பேய் பிடித்தாட்டுகிறதா? உலகிலிதைப்போல கெட்டதொன்றுமில்லை.

### பிரபுலிங்கலீலை

பாவமும் பழியும் நல்கும் பல்வகைப் புகழறங்கள்
யாவையு மழிக்குமெய்து இன்பமுமதனுலெய்து
நோவு நன்மறபுஞ்செய்யும் நோன்பு நல்லொழுக்கமேன்மை
சாவுமென் ணுருமனிற்குந் தயங்குபுண் காமமென்பார்.

### திருக்குற்றல ஸ்தலப்புராணம்

விண்டுலாவுயர் விண்ணவராயினும்
பெண்கள்காமம் பிடித்தவருய்வரோ
புண்களாகிப் புரந்தரன் மெய்யெல்லாங்
கண்களானதுங் காமத்தினுலன்றோ.

### நீதிநெறி

கொலையஞ்சார் பொய்நாணுர் மானமும் ஓம்பார்
களவொன்றோ எனையவுஞ்செய்வார் பழியொடு
பாவமிஃதென்னுர் பிறிதுமற்றென் செய்யார்
காமங் கதுவப்பட்டார்.

அன்றியும் ஒருவனுக்கு முதல் கல்யாணந்தான் தாரம், இரண்டாவது கல்யாணம் பாரம், மூன்ருவது கல்யாணம் கோரம், நான்காவது கல்யாணமோ நாசமென்பார்கள். ஆகிலுமெல்லாந் தெரிந்த தங்களுக்கு பெண்பேதையாகிய நான் சொல்வது பிசகாயிருந்தாலு மிருக்கலாம், அதைப்பற்றி மன்னிக்கக் கேட்டுக் கொள்கிறேனென்ருள்.

அதற்கு இராஜன் நீ சொல்லிய படிதவறென்று யோசிக்கில் முன்னுள்ளோர் நூற்றுக் கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பெண்கள் கட்டிவாழவில்லையா ? அவர்களென்ன கெட்டுப்போனது அதெல்லாமூழைப் பொறுத்திருக்கிறது.

### திருக்குறள்

"ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று
சூழினுந்தான் முந்துறும்"
"நல்லவை யெல்லா அந்தீய வாக தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

பிள்ளையார் புராணம்

"விடாது தனுவிற் செயு முயற்சி மென்மேற் பொருளை மிக
[வளர்க்கும்
கொடாது சுற்று நட்பினர்தங் கிளையுந் தாங்கு மியாவர்க்குந்
தடாத உபகாரமும் புரியுந்தடந்தாமறை யாளையுஞ் சேர்க்கும்
படாதவூழ் வந்திடு காறும்பயனை விளக்கும் பழியின்றாம்"

என்று சொல்லி இராணியை ஒருவாறு சமாதானப் படுத்திக் கொண்டான். மந்திரியினுத்திறவுப்படி அரண்மனை முதலான விடங்களெல்லாம் பந்தற் போட்டு, ல்ஸ்தர் குளோப்புகள் தூக்கி, வாழை கமுகு முதலானதுகள் கட்டி யலங் கரித்தனர். இன்னும் பட்டணத்தைச் சுற்றிக் கலியாணத் திற்கு வரும் இராஜர்கள் தங்கும்படியான விடுதிகளும் அவர் களுக்கு சப்ளை செய்யும் வேலைக்காரர்களுந் தனித்தனி திட் டஞ் செய்தார்கள்.

விநோத புரிக்குப் பெண்ணழைத்து வரும்படி போன வர்களைக் கண்ட திசிலராஜன் தகுந்த மரியாதையுடன் வரவேற்று நல்விருந்து முதலானதுகளெல்லாஞ் செய்தான். அதன் பின் கொண்டு வந்திருந்த விலையுயர்ந்த ஆடையாபரணங் களையும் விலமதிக்க முடியாத் பனாரிஸ் ரவிக்கை சேலை முத லானவைகளை தாம்பாளத்தில் வெற்றிலை பாக்கு புஷ்பங்களு டன் வைத்து இராஜனிடங் கொடுக்க, அதை வாங்கியவர் தம் பத்தினி தினமணி யிருக்கு மறைக்கு அனுப்பினர். அவளுட னே தன் மகளையழைப்பித்து மகளே? நீ இன்று முதல் எங்களிராஜபத்தினி யென்பதற்கடையாளமாய் இப்பொழு தவர் அனுப்பி யிருக்கும் ஆபரணம் பட்டு முதலியவை களைப் பெற்றுக் கொள்வா யென்று கொடுக்க! சற்று நாண முள்ளவள் போற் காட்டி இருகையாலும் வாங்கிக்கொண்டு தன்னறைக் கேகினள். பின்பு மறுநாட்காலை சூரியோதயம்

5 நாழிகைக்குள் விநோத புரியை விட்டுப் பிரயாணப்பட்டு இராத்திரி நாலு நாழிகைக் கெல்லாம் அஞ்சலில் பெண் அங்கதேசம் வந்து சேர்ந்துவிட்டது. மற்றுண்டான சகல ராஜாக்களும் பந்துக்களும் வந்து சேர்ந்தார்கள். மறு நாள் ஆகமப்படி சுருக்கு, சுருவம், சங்கு, பாத்திரம், தர்ப் பங்கள், அக்ஷிதை முதலான சுபவஸ்துகள் நிறைந்திருக்கப் புரோகிதர்கள் சகல விதமான கருமங்களும் செய்து சூரிய உதயத்திற்குள் சிருங்க ராஜனுக்கும் அலந்தலைக்கும் மணம் நடந்தது. பின்பு பந்தலி லிருந்தவர்களுக் கெல்லாம் சந்த ணம் தாம்பூலாதிகள் கொடுத்தனுப்பப்பட்டது. விடுதிகளிற் றங்கியிருக்கு மொவ்வொரு ராஜாக்களுந் தான் கொண்டு வந்திருக்குங் காணிக்கையுடன்வந்து சிருங்கராஜனைக் கண்டு போயினர். இதெல்லா வற்றையுங் கண்ணுற்றிருந்த பெண் ணின் தாயாகிய தினமணியும் இராஜனும் மனக்களிப்பெய்தி ஆனந்த மடைந்திருந்தனர். இவ்விதமாய் மூன்று நாள் மிக்க சந்தோஷத்துடனிருந்து கல்யாணத்திற்கு வந்த ஒவ்வொரு வரும் தன் தன் பதியடைந்தனர்.

சுந்தர ரென்னுஞ் சன்னியாசிக்கு சிருங்க ராஜனென வன் ஆட்களனுப்பியும் அவர் கல்யாணத்திற்கு வராமலி ருக்க மனதிற் கொஞ்சம் விசனந் தோன்றி பின்வருமாறு

நாடெலாஞ் செந்நெல் விளையினும் நாட்டில் நதி யெலாம் [நவமணி யொழினும்
காடெலா மாடை காய்ப்பினு மாரிக்கனகமே பொழியினு [மண்மேல்
ஆடலே புரியும் பொன்னம்பல வாணரவர வற்கமைத்ததே [யல்லால்
வீடெலாம் புரண்டு ருண்டழுகினும் வருமோவிதியினி லெள் [ளள வதிகம்.

என்று எண்ணிக் கொண்டிருந்து விட்டான். பின்பு அலந்தலையாகிய ராணியானவள் கெர்ப்பமாகிப் பத்து மாத முங்கழித்து ஒரு ஆண்மகவைப் பெற்றனள். அது கேட்டு சிருங்க ராஜன் கோடி பிராமணர்களையும் யாசகர்களையும் வருவித்துக் கோதானம் பூதானஞ் சொர்ண தானம் வஸ்திரதானமுங் கொடுத்து மனக்களிப்படைந்து சகலர் களுக்குஞ் சீனிபழம் வெற்றிலை பாக்கு முதலானது கொடுத்தனுப்ப லானுன். அதன் பின் ஜோதிடர்களை வரவழைத்து ஜாதகங்கணிக்கச் சொல்ல, அவர்களவ் விதமே கணித்துப் பலனை யாராயும் போது இச்சாதகன் நல்ல தேஜசுடையவனுகவும் வித்வானுகவும் புஜபல பராக்கிரமத்திற் சிறந்தவனுகவும் கொடையாளியாகவு மிருப்பான். ஆனுலிவன் கொஞ்சக் காலம் பாபிஷ்டனெனப்பெயர்படைத்துப் பின்பவன் செய்கையாலப்பெயர் நீங்குமென்று சொன்னுர்கள். உடனே அச்சிசுவுக்குத் தனபாலனெனப் பெயரிடப்பட்டது. முன் சிருங்கராஜனுக்கு மணமுடிந்த நாலைந்து நாளைக்குப்பின் மூத்த மனைவியின் பள்ளியறைக்குப்போய் அவளுக்கிருக்குமனதை யறியவேண்டிச் சென்றனன். அப்பொழுதவள் முன்போல வேதன்நாதனுக்கு மரியாதை செய்தனள். அதனுல் ராஜனுக்குச் சந்தோஷமுண்டாகி இராப்பொழுதை யவடத்திலே கழித்தனன். இதனுலவ்வம்மணி யன்று முதல் கெற்பமாகினுள். இதிலிருதாரங்களு மொன்றுய்க் கெற்பமானதைப் பற்றி ஊரெங்கு மொருவுவலையாகவே இருந்தது. மூத்த மனைவியும் பத்துமாதமுஞ் சென்று இளையவள் பிரசவமான ஆறுநாளைக்குப்பின் சூரியப்பிரகாசம்போல் ஒரு ஆண்மகவைப் பெற்றனள். இதினுல் இராஜனுக்கு மிக்க மனக்களிப்புண்டாகி ஜோதிடர்களை யழைத்து ஜாதகம் கணித்துப் பார்க்கையில் இவன் மகா பராக்கிரமசாலியாயும் சக்கிரவர்த்தியாயும் மிக்க கொடையாளியாயு மிருப்பான். ஆனுல்

பாலியத்தில் கொஞ்சநாள் இன்த்தாரால் துன்பமனுபவிக்க வேண்டுமென்றிருக்கிறதென்று சொன்னார்கள். பின்பு சக்லனையும் வருத்தி ஞானமிர்தமென்று நாமகரணமிட்டார்கள். இதன்பின் னிருவர்களையும் நாளொருமேனியும்பொழுதொருவண்ணமுமாக வளர்த்து வந்தார்கள். இவ்விதமாக ஐந்துபிராயம் வந்தவுடன் பள்ளிக்கு வைக்கவேண்டு மென்று நல்ல வாசிரிய ரொருவரைப் பார்த்து வரும்படி மந்திரிக்கு ஆக்ஞாபித்தனர். அதின்படி மந்திரி தருவித்துத் தெரிவிக்க, ராஜாவானவன் நேரில் உபாத்தியாயரைப் பார்த்து என் குமாரர்களுக்கு நான்கு வேதம், ஆறுசாஸ்திரம், பதினெண் புராணம், அறுபத்துநான்கு கலைக்ஞானம், மனுவிக்ஞான முதலானதுகளும்! இன்னும் அரசுரிமைக்குரிய குதிரை யேற்றம், யானையேற்றம், வில்வித்தை முதலானவைகளையுங் கற்பிக்க வேண்டுமென்று சொல்லி ஊரழைத்துப் பிள்ளைகளைப்பள்ளிக்கு வைத்தனன். ஆசிரியர் இருவர்களுக்குமொர்ரேமாதிரியாக சகலவித்தைகளையும் கற்பிக்க, ஞானமிர்தம் தனபாலனைவிடச் சிக்கிரத்திற் கற்றுக்கொள்வானுபினன். இதில் ஞானமிர்தம் தினம் பள்ளியிற்போய் படித்து வீட்டிற்கு வந்ததின்பின் சுந்தரரிடம் போய் வந்திருப்பான். தனபாலனுக்கு தன் ஜோடிப்பிள்ளைகளுடன் சேர்ந்து கொண்டு ஏகதடபுடலாய் சிங்காரித்து வெளியேபோய் உலாத்துவதும், டிருமா பாட்டு கச்சேரி சதிர்க்கச்சேரி முதலியவைகளைப்பார்ப்பதுமே வேலையாயிருந்தது. சிருங்கராஜன் இருகுமாரர்களையு மிருகண்போற்பாவித்துவந்தான். இம்மாதிரியே மூத்தாளும் பாவித்து வந்தாள். இளையாள் மாத்திரம் தன் குமாரனைவிட ஞானமிர்தம் கல்வியிற் சமர்த்தனுய் வருகிறானென்ற பொறாமை மேற்கொண்டு அவனை இவ்விராஜ்யத்தை விட்டகற்ற வேண்டியதற் குண்டான முயற்சியைத் தேடிக்கொண்டு சமயம் பார்த்திருந்தாள்.

ஒரு நாள் ஞானமிர்தம் சுந்தரர் வாசஸ்தலத்திற்கு போகும்போது அநேக பெரியமனுஷர்களும், காவிபுனைந்த அநேக புண்யவான்களும், இன்னுஞ் சிலருங் கூடியிருக்கக் கண்டு தான் சுந்தரரிடம் பேச அவகாசமின்மைபற்றி வீடுவந்து படித்துக்கொண்டிருந்து விட்டான். மறுநாளங்கு போய் சுந்தரரிடம் நேற்று இங்கு அவ்வளவு பேர்களுமிவடத்திற் கூடி இருக்கக்காரணமென்னவென்று வினவ, சுந்தரர் சொன்னதாவது அப்பா இதற்கு சாது சங்கமென்று பெயர். ஒவ்வொரு மாசத்தின் கடைசி சுக்கிரவாரத்திற் கூடி பேசுவதே என்றார்.

ஞான:—சாது சங்கமென்பதென்ன?

சுந்த:—இந்திரியங்களையும் அவைகளின் சேஷ்டைகளையும் ஒழித்தவர்களின் கூட்டுறவு.

ஞான:—அதினாலுண்டாகு நன்மைகளெவை?

சுந்த:—அக்ஞானத்தினாலுண்டாகுந் துக்கத்தைப் போக்குகிறதுமன்றி சாதுக்களுடன் சம்பாஷிப்பதினால் சாதுக்களாகவுஞ்செய்யும். இன்னமதனால் அநித்யவஸ்துவையறிந்து விலக்கி நித்தியவஸ்துவான பரம்பொருளை யடையும்படியும் செய்கின்றது.

ஞான:—என்னையுமதிற் சேர்த்துக் கொள்ளலாமா?

சுந்த:—உனக்கின்னும் வயதுவரவில்லை. ஆயினுமதற்கு வேண்டியவைகளை இப்பொழுதே படிப்படியாய் வாசித்தறிந்துகொண்டு வந்தால் பின்னுக்கு நன்மையுண்டாகும்.

ஞான:—முதலில் படிக்கவேண்டிய நூல்களெவை?

சுந்த:—ஆகமநூல்களை யனுசரித்து நடந்தால் நல்லொழுக்க முதலானவைகளுண்டாகி அறிவுமிகும். அதின்பின்

நல்லொழுக்கத்தால் சஞ்சிதமும் ஆகாமியமும் தீபத்தில் விழு ம் அந்துபோல நாசமாகின்றன. அதனால் வினையின் பயனை வேண்டும்போது தரித்தும் வேண்டாதபோது விடுகிறது மான பாதரட்சைக் கொப்பாய்நினைப்பாய்.

ஞானு:—இதற்குக் குருவின்றித்தானே படித்துக்கொள் ளலாமா?

சுந்த:—ஒருக்காலு முடியாது. குருவின்றி படிக் கும் படிப்பானது ஜீனியென்று ஒரு காகிதத்திலெழுதி நக்கினாலுண்டாகு மினிப்பைப்போலிருக்கும். முதலிற் பிரதி பந்தத்தை அகற்றுவதற்குக் குருவின் கடாட்சம் வேண்டும். முன்னுள்ள நூற்களில் அடியில் வருமாறு சொல்லப்பட்டி ருக்கிறது.

சிவஞானவள்ளலார்

குருவிலான் பெற்றஞானம் குமரியைக் குமரிகூடி
மருவிய இன்பமொக்கு மண்ணிடை நம்போல் வந்த
குருவினால் பெற்றஞானம் குமரியைக் குமரன்கூடி
மருவிய இன்பமொக்கு மென்பர் நல்மதியுள்ளோரே.

ஞான:—தாங்களே எனக்குக் குருவாயிருக்கப் பிரார் த்திக்கிறேன்.

சுந்த:—நல்லது இப்பொழுது சொல்லு மொன்றைக்கவ னித்து நடந்துவா. அதாவது இவ்வுலகம் அக்ஞான நிறை ந்த அந்தகாரமான காடு. அதில் வசிக்கும் மானிடர்களை கா மம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என் னும் ஆறுதிருடர்களும் விவேகமாகிய பொருளைக் கவர்ந்து செல்லுகிறார்கள். ஆனதாலவர்களைக் கண்டு பிடித்து நாம் சொல்லுகிறபடி யவர்களை நடக்க முதலில் ஏற்பாடு செய்து கொள்ளவேண்டும். அவ்விதஞ்செய்தால் முடிவில் தன்னைத்

தானறியலாம். அதனல் நினைப்பு மறப்பு இன்பம் துன்பம் இரவு பகல் நீ நான் என்பதென்றதை ஞானத்தோணியாற் கடந்து ஞான புராணனாகிய பிறவிக்கடலைக் கடக்கும்படி யான பரமாத்மாவைக் காணலாம்.

கைவல்யம்

களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண்
[ணாடி காட்டும் போது
விளங்கிய தன்மயமாகி அபேதமாகி விகற்பமின்றி நிருவிகற்
[பமானாற்போல
அளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய் ஆனந்தமாம் பிரமத்
[தைக்யமான
உளந்தெளிந்த படியிருந்தா லுலகமெங்கே யுலைவெங்கே யெ
[ன்று சங்கை யொழித்திடாயே.

மவுன தேசிகம்

செப்பரிய அம்பரத்தைக் காத்தாயானல்
தேகமங்கே நிராமயமாய்க் கரைந்துபோகும்
வுப்பரிய வீசனிட மூலமான
வுண்மையறிந்தறிந்தறிவில் மௌனமூட்ட
தப்பாது சீவன்முத்தி யடையும்பாரு
கற்பூரதீபமாகும் சாரமங்கே
அப்பா கேளறிவென்ன தேவிதேவி
யானந்த வானந்த மௌனசிவமுமாமே.

என்று சொல்ல ஞானமிர்தம் கேட்டு இன்றுமுதலவ் விதம் நடக்கப்பிரயாசைப்படுகிறே னென்றான். ஆனல் சரி யென்று பேசிக்கொண்டிருந்து வீட்டிற்குவந்து சேர்ந்த னன்.

இவ்விதமிருக்கையில் ஊர்ஜனங்களெல்லாம் தங்கள் பயிர்களை மிருகங்கள் வந்து அழிக்கிறதினல் அம்மிருகங்

களை ஊருக்குள் வரவொட்டாமற் செய்யவேண்டுமென்று அரசனிடம் முறையிட இராஜன் உடனே வேட்டைக்குப் போகப்பிரயாணப்பட்டார். இதை யறிந்த யவர் குமாரர்களில் தனபாலன் நாங்களிருவரிருக்க தாங்கள் காட்டுக்கு வேட்டைக்குப்போகத்தகுமா? நாங்களே ஆட்களுடன்போய் அதிசீக்கிரத்தில் வேட்டையாடி வருகிறோமென்று சொல்ல, ஞானமிர்தம் நாம் உயிர்வதை செய்யலாமா உலகிலது பிறவிக்கிடத்தை யுண்டுபண்ணுமென்று சொல்லியடியில் வருமாறு பிரசங்கித்தான்.

கொல்லா விரதமே எல்லாத் தருமங்கிளிலுஞ் சிறந்தது

திருக்குறள்

நல்லாரெனப் படுவதியா தெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழும் நெறி.
கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

அதுகள் நம்மைப்போலுயிரென்றும் நாதவிந்து சகிதம் பசு பதி நாதன் நிறைந்துளானென்றும் எண்ணாமல் ஜீவ வதை செய்தல் பிறவிக்குத் தாயாகிய பெரும்பாவம். பொதுவாயோருயிரை ஒருவன் யெவ்விதமாய்க் கொல்லுகிறானோ அவனை யவ்விதமாய் மறுபிறப்பில் முன்மாதிரி யவனைக்கொல்லும் "முற்பகல் செய்தால் பிற்பகலில் விளையு" மென்பதை யுத்தேசித்துக் கொள்ளவும். கொலையே பிறவிக்குவித்து ஊனுண்ணல் உயிருக்குநரகவேதனை. மனம் வாக்குச் காயத்தால் தன்னையறியாமல் உண்டாகும். பாவத்திற்கு தீர்த்த யாத்திரை ஸ்தலதெரிசன முதலான புண்ணியகர்மங்களினால் விமோசனமுண்டு. ஈரறிவுமூவறிவு நான்கறிவுடைய ஜீவன்களை யறுத்துப்பிடுங்கி முறித்துத்தறித்து பதைபதைக்கத் துடிதுடிக்க இரத்தம் பெருக கொலைசெய்தால் எழு நரகத்தி

லுமீளாமற் கிடந்து வருந்தித் துன்பமடைவார்கள். என்னத் தினு லென்றால் கொலையே எல்லாப்பாவத்திற்கு முதலாம்! ஆதலால் கொல்லாமையே எல்லாப்புண்யத்திற்கு முதன்மை எனப்படும்.

திருக்குறள்.

அறிவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாம்தரும்.

சிவஞான தீபம்

கொலையாதி நெறியகன்ற ஞானந்தானே
கூறரிய மேலான ஞானமாகும்
கொலையாதியான்றொழு குந்தவங்கடாமே
குற்றமில்லா நற்றவமென் றுரைக்குநூலுங்
கொலையாதியகற்றிய நல்லறங்கடாமே
குவலத்திலொப்பரிய வரங்களாகும்
கொலையாதி யகன்றபெருஞ் செல்வந்தானே
கூறிலுயிர்க்கிதமான வாழ்வுதாமே.

ஜீவஹிம்ஸை செய்தவன் இன்மையிலே துன்பங்களை யனுபவியாவிட்டாலும் மறுமையில் நரகத்திலழுந்திப் பின்பு பூமியிற்றோன்றி மீதபாவத்திற்காகத் துக்கசாகரத்தில் மூழ்கி வருத்தமடைவான். அது எதுபோலென்றால் ஒருவன் தன் வயலிற் பயிர்செய்து விளைவித்துப் பலனைப்பெற்று தான் புசிப்பதற்கும் மறுதரம் பயிர் செய்ய விதை முதல் வைத்துக்கொள்வதும் போலாம்.

சிவஞானசித்தியார்

மேலைக்கு வித்துமாகி விளைந்தவையுணவுமாகி
ஞாலத்து வருமாபோல நாம் செயும் வினைகளெல்லாம்
மேலத்தான் பலமாச்செய்யு மீதமகிதங்கட்கெல்லா
மூலவித்தாகி என்றும் வந்திடு முறைமையோடே.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த தனபாலனுடனே இப்பொழுது சொல்லியபடி எல்லாவற்றிலு மீசனிறைந்திருப்பதால் இலை காய் கறி முதலிய காய் பதார்த்தங்களுஞ் சீவனுயிருக்க நாமதைப் பறித்துச் சாப்பிடுவது பாவமல்லவாவென்று கேட்க, ஞானமிர்தம் அதற்கு அடியில் வருமாறு சொல்லலுற்றனன்.

காய்கறிகளுக்கு ஆடு கோழி மச்ச முதலிய வாத்மாக்களுக் கிருப்பதுபோல கண், மூக்கு, நாக்கு, காது, கால் முதலியவைகளும் சுக்கில சுரோணிதமுங் கிடையா. இதின்றி அறுக்கும்போதும் மூறிக்கும்போதும் துடிதுடிப்பு பதைபதைப்பு முதலிய வருத்தங்களும் இரத்தம் பெருகுவதுங் கிடையாது. ஆனல் வெப்பு நீரருந்துவது மாத்திரமுண்டு. அவைகளிலிருந்து தோன்றுகிற ஜடவித்துக்களைக் கொண்டு அவைகளைப்போல நம்மால் உண்டுபண்ணக்கூடும். அதுபோல மற்ற ஜீவபிராணிகளை நம்மால் உண்டுபண்ண முடியாது. இன்னமவைகளை நாமெப்பொழுதும் ஈச்வரார்ப்பிதஞ் செய்தே பறித்துஞ் சமைத்துஞ் சாப்பிடவேண்டும். ஆனதுபற்றி நமது சுந்தர சுவாமிகளிடம் போய் வேட்டையாடுவதனல் பாவமுண்டா வில்லையாவென்று கேட்டு அவர் சொல்லியபடி செய்வோமென்னும் உத்தேசத்துடன் இருவரும் சுந்தரரிடம்போய்ச் சொல்லிக்கொண்டார்கள். இதெல்லாவற்றையுங்கேட்ட அவர் அடியில் சொல்லியிருக்கிறபடி செப்பலுற்றனர்.

எக்ஞாதிகளுக்கு ஜீவன்களுடைய வபையையெடுத்து மந்திரங்களினலே ஹோமம் செய்து அக்கினிமுன் தேவதைகளுக்கு திருப்தி செய்வதால் ஜீவன்களை வதைத்ததோஷம் விலகிப்போய் விடும்.

இன்னும் ருக்வேதப்படி அரசன் குடிகளுக்கும் அவர்களிட்ட பயிர்களுக்கும் தபசிகளுக்கு மிடையூறு செய்யு மிருகாதிகளை வேட்டையாடிக் கொல்வதால் பாவமுண்டாகாது. வேடரென்னுஞ் சாதியார் தங்கள் குல ஆசாரத் தொழிலாகிய வேட்டையாடுவதாலும் பாவ மேற்படாது. சாத்ரேய மென்னும் சமயத்திலுள்ள அதர்வணவேதப் படிப்பிலுள்ள யாமளை நூலின்படி யந்திர மந்திர சமய சம்பந்தமான தேவதை களுக்குப் பலியிடுவதாலுங் குற்ற முண்டாகாது.

ஆனல் அநித்திய தேகத்தை வளர்க்கும்படி ஓராத்மாவை கொல்லுதல் அறிவாலறிந்த பாவமாகையால் அவர்கள் கட்டாயம் கண்டிக்கப் படுவார்கள். அதற்கு சாக்ஷி

சிவதரு மோத்ரம்

உண்ண லனை விரும்பியுயிர்க் கொலை
எண்ணுவான் கொலை கண்டிரங்கான் கொலை
பண்ணுவாரைத் தடுத்தும் பகர்கிலா
னண்ணு வானிபே ரோடெனு நால்வரும்

இதீகாசம்

கொன்ருன் கொலச் சொன்னுன் கூசவறுத்தானட்டான்
தின்ருன் விலக்கிடான் சென்றென்று—கொன்றவகை
குட்டலங்களிட் டெரிக்க வெந்து கொடு வெனங் நரகிற்
பட்டமுன்று வீழ்வார் பதைத்து.

மெய் மொழி

சத்திய முரைக்க நாளுஞ் சகல பல்லுயிர்கட் கெல்லா
நித்தலு மிதமே செய்ய நினைப்பது சிவத்தை யென்று
மத்தன் வேதாக மத்திலருளிய பொருளிம் மூன்று
மெத்திசைச் சமயத்தோர்க்கு மெய்யதங் களுக்கு மிட்டம்.

என்று சுந்திரர் சொன்னபின் பிள்ளைகளிருவரும் தகப்பனிடம் நாளைக்காலையில் வேட்டைக்குப் பிரயாணப்படவேண்டுமென்று சொல்ல, தகப்பன் நீங்கள் சொல்வது சரிதான் உங்கள் பால்யவயதைப் பற்றி யோசிக்கிறே னென்று சொல்ல, சிறுவர்கள் நாங்கள் வயதிற் குறைந்தவர்களா யிருந்த போதிலும் வில்வித்தையிற் றேர்ந்தவர்களென்றே நினைக்கிறோ மென்றார்கள். ஆனாற்சரி என்று மந்திரியை யழைப்பித்து அவர்களுக்கு வேண்டிய சேனை யாட்கள் சாமான்கள் திட்டஞ் செய்து கொடுக்கும்படி ஆக்ஞாபித்தார். அப்படியே மந்திரி சேகரித்துத் தயாராய் வைத்து விட்டான். இதையறிந்த இளையராணியானவள் தான் கருதியிருந்த வேலையை முடிப்பதற்கு சமயம் வாய்த்ததென்று எண்ணி இருவர்களுக்கும் பக்ஷணம் தயாரித்து ஞானமிர்தத்துக்குக் கொடுக்கப்போகிற பக்ஷணத்தில் நாவியைச் சேர்த்துச் செய்தும் தன்மகனுக்கு அதைச்சேராமற் செய்துகொண்டும் பிள்ளைகளைப்பார்த்துமக்களா? நீங்கள் உங்கள் பலகாரத்தை உங்கள் தோற்பைக்குள் வைத்துக் கொள்ளுங்கள் ஏனெனில் வேட்டையாடும் பொழுது சீக்கிரங் களைத்துப் போனால் பிறருதவி யன்னியில் தானே எடுத்துச் சாப்பிட்டுக் கொள்ளலா மென்று தனித்தனிகையிற் கொடுக்க, அதை வாங்கி வைத்துக் கொண்டு வேட்டையாடப் போனார்கள். காட்டிற்குள்ளேகி ஒவ்வொருவரும் தனித்தனி ஆட்களைச் சேர்த்துக்கொண்டு பிரிந்துபோய் வேட்டையாடினர். கடைசியாக இருபேரும் எதிர்முகமாகவந்து ஒருவரையொருவர் ஒரு குளத்தண்டை சந்தித்தார்கள். அதன்பின் சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்து பசியாறலாமென்று தன் தன் பைக்குள் கைகளைப் போட்டெடுத்து சாப்பிட வாரம்பித்தார்கள். இதிலெப்பொழுதும் ஞானமிர்தம் சாப்பிடும்போதெல்லாம் காகத்திற்கு வைத்து சாப்பிடுகிற வழக்கம்போல் அன்றும்

பக்ஷணத்திற் கொஞ்சமெடுத்துக் காகத்துக்கு வைத்தான். அதை தின்று காகமிறந்துவிட்டது. இதைக்கண்ட தனபாலன் தன்னுடைய பக்ஷணத்திற் கொஞ்சமெடுத்து வைக்க அதை யொரு காகந் தின்றுபறந்து போய்விட்டது. அதன் பின் தனபாலனுடைய பக்ஷணத்தை இருவரும் சாப்பிட்டுவிட்டு ஊர் நோக்கிப் பிரயாணப்பட்டு வருவதையறிந்த ராஜன் எதிர்கொண்டு போயழைத்து வந்தான். இராஜன் வீடு வந்ததும் வேட்டையாடப்போன விஷயங்களைப்பற்றி வினவலானன். அதற்கு தனபாலன் நாங்கள் எண்ணிப்போன காரியம் யாதொரு விக்னமுமன்றி நடந்தேறினது. ஆனல் நினையாத ஒரு பெருங்காரியம் வந்து நேர்ந்திருக்கிறதென்ருன். அதென்னவென்று அரசன் கேட்க நாங்கள் வேட்டைக்குப் போகும்பொழுது தம்முடைய இளைய பத்னியானவள் எங்களிவருக்கும் இடையில் பசியாருங்களென்று ஒரு பலகாரஞ்செய்து தனித்தனிபைக்குள் வைத்துக்கொள்ளுங்களென்று சொல்லிக்கொடுக்க, நாங்களும் வாங்கிக் கொண்டு போய்விட்டோம். பின்பு ஞானமிர்தமும் நானும் வேட்டையாடிக் களைத்து ஓரிடத்திற் கூடி ஆகாரஞ்செய்ய ஆரம்பித்தோம். அப்பொழுது வழக்கம்போல் ஞானமிர்தம் பக்ஷணதிற் கொஞ்சம் காகத்துக்குப்போட அதைத் தின்று உடனே இறந்தது. அதைப் பார்த்துக்கொண்டிருந்த நான் என்பக்ஷணத்திற் கொஞ்சமெடுத்து காகத்திற்குப் போட்டேன். அதைத் தின்றுவிட்டு பறந்தோடிப்போயிற்று. பின்பு என்னுடைய பக்ஷணத்தை இருவரும் சாப்பிடடோம். இதனுலென்னதோன்றுகிறதென்ருல் ஞானமிர்தத்தைக் கொல்லவேண்டுமென்றே தம்முடைய இளைய பத்தினியும் என்னுடையதாயாருமான அலந்தலையம்மாள் செய்த காரியமாயிருக்கிறது. ஆனலிதற்குத் தகுந்தபடி உமதாக்கினையைச் செலுத்தாவிடில் நம் மிராச்சியமே கெட்டுப்போகும். அரச

னைப்போலவே குடிகளும் நடக்குமென்று தனபாலன் அடியில் வருமாறு சொல்லினன்.

திருக்குறள்

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
  கிறையென்று வைக்கப்படும்.
செவிகைப்பச் சொற் பொறுக்கும் பண்புடைவேந்தன்
  கவிகை கீழ் தங்குமுலகு.
ஓர்ந்து கண்ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
  தேர்ந்து செய்வஃதேமுறை.

உடனே ஞானமிர்தம் உலகில் எவ்வளவு கல்வி கேள்விகளிற் சிறந்த பெண்ணுயிருந்தாலும்

"நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே"

பெண் புத்திபின்தூக்கும் என்றதைப் போலவும், அறவடித்த முன் சோறு காடிப்பானையில் விழும் என்றதைப் போன்ற பழமொழிகளைப் போல தவறுதல் ஏற்பட்டுவிட்டது. ஆனதாலிதைப்பற்றி யொன்றுஞ் செய்யாதொழிவது நல்லதென்று சொன்னன். இவனிவ்விதஞ் சொல்லவே ராஜனுக்கும் தனபாலனுக்கும் கோபமதிகரித்ததே தவிர கொஞ்சங்கூடக் குறையாமல் மந்திரியை வரவழைத்து சகல சங்கதிகளையுஞ் சொல்லி இதற்குத் தகுந்த பரிகாரமுடனே செய்யவேண்டும்; இல்லாவிட்டால் நமது தனபாலனே நம்மைக்குறை சொல்வானென்று சொன்னர். மந்திரி இதென்ன விபரீதம் கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டாப் போலிருக்கிறது. நாம் கண்ணைக்களைவதா கையைக் களைவதாவென்று வெகுநேரம் யோசித்துக் கடைசியாய் அரசே! தங்கள் இளைய ராணியாரைச் சிங்காரத் தோப்பிலிருக்கும் வடபக்கமுள்ள அறையில் தானகவே

சமையல்செய்து சாப்பிட்டுக்கொண்டிருக்கும்படி செய்வதே யுசிதமென்றும் மற்றெந்த விதமான தண்டனையும்கொடுப்பது தகுதியாகத் தோன்றவில்லை யென்றும் சொன்னான். அது கேட்ட அரசன் தானுஞ்சற்றுநேர மாலோசித்து அவ்வித மே நாளைக் காலையில் இளைய ராணியாரை மந்திரி சொல்லிய யேற்பாட்டின்படியே செய்துவிட வேண்டுமென்று நிர்ண யஞ் செய்துகொண்டு தன்மூத்த மனைவி யறைக்குச் சென்று பிள்ளைகள் வேட்டைக்குப்போகும்போது அலந்தலை இருவ ருக்கும் பக்குவஞ்சொல்லி பக்ஷணம் கொடுத்ததையும் பின் பதைக் காட்டில் சாப்பிடும் போது நடந்ததையும் அதினால் தன் இளையகுமாரன் சொன்னவார்த்தையையும் அதன்மேல் தான் நிர்ணயித்திருக்குந் தெண்டனையையும் விபரமாகச் சொன்னான். அதுகேட்டவள் அதிதிகட்குத் தெய்வமே துணைஎன்றபடி கடவுள் காப்பாற்றிவிட்டார். இனியவளை இதுவிஷயமாயொரு தொந்தரவு செய்வதிற் பயனில்லை; செய் தார்க்குச் செய்தவினை என்னுமடியில் வரும் பாட்டைச் சொன்னாள்.

திருக்குறள்

"கருத்தின்னா செய்தவக்கண்ணு மருத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்."
"செய்யாமற் செற்றார்க்கு மின்னாச்செய்தபி
னுய்ய விழுமந் தரும."

இதைச் செவியுற்ற வரசன் இருந்தாலும் இந்த விஷ யத்திற் சும்மாயிருந்துவிட்டாற் பின்னுக்கு ஞானமிர்தம் கதி நிற்கதியாய்ப் போகுமென்று தோன்றுகிறபடியால் அவசியம் சிட்சை கொடுத்தே தீரவேண்டுமென்று சொன் னான். அதின்படி மறுநாள் காலை சேவகர்களுக்கு உத்தரவு செய்ய அவர்கள் சின்னராணியை யழைத்துப்போய் முன்

சொன்ன வறையில் வைத்து நாலுபேர் காவல் நின்றுவிட்ட்டார்கள். இவ்விதமெல்லாம் நடக்கப்போகிற தென்று முன்னமே தெரிந்திருந்த சின்னராணியானவள் ஒன்றும் பேசாமலிருந்தாள். காவலில் வைத்துவிட்டு வந்து அரசனுக்குத் தெரிவிக்க,அவர் மந்திரியிடஞ் சொல்லி சமயனுக்கு வேண்டிய பாத்திரபண்டங்களும் மற்றச் சாமான்களு மனுப்பும்படி சொல்ல, அவ்விதமே மந்திரி யனுப்பிவைத்தான். பின்பு அலந்தலையானவள் தன் கையினுல் சமைக்க ஆரம்பித்ததில் சாதம் பாதி வெந்தும் பாதிவேகாமலும் வடிக்கத் தெரியாமல் சீரழிந்து கறிவைக்கத் தெரியாமல் புளியைக் கரைத்துக்கொண்டு சாப்பிட வாரம்பித்தனள். அப்பொழுதெனக்கிவ்விதம் வருவானேனென்று யோசிக்கையில் தன் வினை தன்னைச்சுடும் ஒட்டையப்பம் வீட்டைச்சுடும் யென்பதை யோசியாமற் செய்ததின் பலனிது வென்றும்.

பட்டணத்தார்

"மனையாளு மக்களும் வாழ்வுந்தன முந்தன் வாயின்மட்டே
இனமான சுற்றமயானமட்டே வழிக்கேது துணை
தினையாமள வென்னவாகிலு முன்பு செய்ததவந்
தனையாளவென்று பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே"
[என்ற.

சொல்லி யிருப்பதை கவனிக்காம லெல்லாஞ் சதமென்றெண்ணினபடியா லிவ்விதஞ் சம்பவித்தது. ஆபினும் விதியின் பயனைத் தடுக்க யாரால் முடியும்.

திருக்குறள்

"நுண்ணிய நூல்பலகற்பினு மற்றுந்தன்
நுண்மையறிவே மிகும்"
"வகுதான் மகுத்த வகைபல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தலரிது"

"ஊழிற் பெருவலியாவு ளமற்றொன்று
சூழினுந் தான் முந்துறும்"

இன்னும் "தன்னாலேதான் கெட்டால் அண்ணாவி யென்செய்வா" ரென்பதைப் போலவும், யானை தன் துதிக்கையால் தலையில் மண்ணைவாரிப் போட்டுக் கொள்வதுபோலவும், என் கெடுமதியால் கேடு விளைந்ததே தவிர வேறொருவரையும் நோகிரதிற் பயனில்லை என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டு வருத்தத்துட னிருக்கலானாள். இங்கிவ் விதமிருக்க;

விநோதபுரியை அரசாளும் திசிலராஜன் குமாரர்களிருவரும் வழக்கம்போல தன்னூருக்குக் கிழக்காயுள்ள ஒரு நிர்மானுஷ்யமான காட்டிற்கேகி, சிரேஷ்டன் தென்திசையாயும் கனிஷ்டன் வடதிசையாயும் நோக்கி வேட்டையாடச் சென்றார்கள். சிரேஷ்டன் சென்ற பக்கத்தில் துஷ்ட மிருகங்கள் ஜாஸ்தியாயிருந்தபடியால் இரண்டுமணி நேரத்திற்குள் மிருகக்குவியலாகக் குவித்துவிட்டுச் சற்று இளைப்பாரலாமென்று ஒரு ஆலாவிருக்ஷத்தினடியி லுட்கார்ந்தான். அதிகக் களைப்பாயிருந்ததினாலும் நல்ல காற்றடித்ததினாலும் கீழே சாய்ந்து சற்று நித்திரைபோயினான். அவ்வழியே வந்த ஓர் ராக்ஷஸன் கண்டு அவனை யப்படியே மயக்கித் தூக்கிக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்றனன். இதை பத்திரகாளியறிந்து (அவன் தாய்க்கு வரங்கொடுத்தவள்.) அவ்விராக்ஷஸனுக்கு இராஜகுமாரனைக் கொல்லாதிருக்கும்படியான புத்தியையுண்டுபண்ணிப் பக்ஷமாய் வளர்க்கும்படி செய்ய, அதுபோல் ராக்ஷஸன் பையனை ஓரறைக்குள் ளடைத்துவைத்துக் கனிவர்க்கங்கள் கொடுத்து வளர்த்து வந்தான். இவ்விதஞ் சிலநாட் கழிந்தபின் அன்பு மிக அவனைக்காவலிலிருந்து நீக்கிவிட்டான். இவ்விதம் நடந்து வருகையிலோர் நாள் இராஜ

குமாரன் தனியாயிருக்கையில் தன்னிலைமையை உத்தேசித்து வியாகூலமடையுங்கால், பத்திரகாளி பிரசன்னமாகி குழந்தாய்! நீ யொன்றுக்கு மஞ்சாது கஷ்டகாலத்தால் வருந்துயரைச் சகித்துக்கொண்டிரு; கொஞ்ச காலத்திற்குள் சுகமடைவாயென்றுசொல்லி மறைந்து போயினள். அதன்பின் சற்று தைரியங்கொண்டு ராக்ஷஸனோடு அதிகமாகச் சம்பாஷிக்கத் தொடங்கினன். அதுகண்ட இராக்ஷஸன் களிப்படைந்து தன்னிடமிருக்கு மந்திரங்களைக் கற்றுக்கொடுப்பதாய்ச் சொல்லக்கேட்டு இராஜகுமாரன் மந்திரமென்பது யாது அதைப் பற்றி முதலிற் சொல்லுமென்று வினவலானன்.

சிவஞான வள்ளலார்

மந்திரமுந் தேவும் மருந்துங் குருவருளும்
தந்திரமும் ஞானந்தரும் பொருளும்—யந்திரமும்
மெய்யென்னில் மெய்யாய் விளங்குமே மேதினியிற்
பொய்யெனிற் பொய்யாகிப்போம்.

இவ்வாறு மந்திரங்களின் உண்மையையும் அதனல் விளையக்கூடிய நன்மையையும் விஸ்தரித்து விளம்பினன். இவ்விபரமெல்லாங் கேட்டு இராஜகுமாரன் உமக்குத் தெரிந்த மந்திரங்களெல்லாவற்றையும் கற்பிப்பீரானல் நானவைகளைக் கற்றுக்கொள்வதிற் றடையில்லை யென்று சொல்ல, இராக்ஷஸன் முழுமனதுடன் தனக்குத் தெரிந்த சகல மந்திரங்களையுங் கற்பித்தான். அதன்பின் இராஜகுமாரன் தனக்குக் கற்றுக்கொடுத்த மந்திரமோவ்வொன்றையும் பரிசோதிக்கக் கருதினன். ராக்ஷஸனோடு தான் பக்ஷிரூபமாகமாறி ஆகாயத்திற் பறந்து பார்க்கின்றேனென்று இராக்ஷஸனிடமுத்திரவுபெற்று தானொரு கிளியாக மாறி உயரப் பறந்து தன்தேசத்திலிரங்கி தாயாகிய தினமணியின் கையிற்போயுட்கார்ந்தான். அதைக்கண்ட ராஜாத்தி காடுகளில் வசிக்கும்

கிளியானது நான்படுந்துயரை மாற்றுதற்காகவே இவ்வித மென்கையில் வந்துட்கார்ந்ததென்று கருதிஃ பின்னும் வேட்டைக்குப் போன பிள்ளைகளினெண்ணமும் தன் கணவன் யுத்தத்திற்குப்போன இடத்திற் சிறைபட்டிருக்கு மெண்ணமும் வந்து வாய்விட்டலறி பரிதபிக்கலானாள்.

அஃதெவ்வாறெனில்,

(பாதசு நாயயென்ற வர்ணமெட்டு.)

இராகம், நாத நாமக்கிரியை. தாளம் ஏகம்.

பல்லவி

என்செய்வேன் தெய்வமே நா னினி
என்செய்வேன் தெய்வமே நான்

சரணங்கள்

மன்னனுடனே என்றும் மக்கட்பேற்றுற்கூடி
மகிமையுடன் வாழ்ந்திருக்கையிலே—என்னை
இன்னல் வந்தடுத்ததை யென்னென்று சொல்லுவேன்
என்குறை தீர்த்தருள்வாய் (பாவி என்செய்வேன்)

2. வனத்தினில் வேட்டைக்கு வழக்கம்போற் சென்றிட்ட
வாலிபர் வராதிருப்பதினால்—எந்தன்
மனக்களிப் பொழிந்துமே வருந்தி மிகவும் வாடி
மயங்கிடும் நாளதனில் (பாவி என்செய்வேன்)

3. அரசனால் யுத்தத்திற் காயுத்தமாகியே
அழைத்திடவே எந்தனரசன்—பட்டத்துப்
புரவியிலேறியே பெருஞ்சேனை தன்னுடன்
புகழ்பெற டில்லிசேர்ந்தார் (பாவி என்செய்வேன்)

4. சத்தியங் தனுர்வித்வை சாமர்த்திய முதலான
சற்குணங்களை யவர்பார்த்து—சேனாபதி
உத்தியோகங் கொடுத்திட ஒருதிசைக்கேகியே
உகந்துமே சமர் பொருத (பாவி என்செய்வேன்)

5. யுத்தமுடியுமுன் னுடல்களைத் திருக்கையில்
ஓடிவந்தே எதிர்த்தலைவன்—ரதந்தனில்
பத்திரமாய்க்கட்டி பரிவுடன் தன்னகர்
பாபிதானேகியபின் (பாவி என்செய்வேன்)

6. கடுஞ்சிறையாயெந்தன் காதலனைவைத்து
கார்க்கிறனென்றமே கேட்க—இன்னும்
படுந்துயர் செந்தணற்பட்ட மெழுகுபோல
பாபிமன முருகிறேனே (பாவி என்செய்வேன்)

இதெல்லாங் கேட்டுக்கொண்டிருந்து உடனே பறந்து ராக்ஷஸனண்டை போய்ச் சேர்ந்து தன்னுருமாறி அவனைக் கண்டு மிக்க களிப்புடன் தாங்கள் கற்றுக்கொடுத்த மந்திரங்களின் மகிமையை யென்னென்று சொல்லுவேன்! சொல்லுவேனென்று புகழ்ந்து பேசினன். இதைக் கண்ட இராக்ஷஸன் இவனைச் சும்மா விடுவது கேவலத்திற் கிடமாகுமென்று யோசித்து என்னுயிருள்ளளவும் என்னை விட்டு நீங்குவதில்லை யென்று சத்தியஞ் செய்யச்சொல்ல, இராஜகுமாரனவ்விதஞ் செய்து கொடுத்து வழக்கம்போலிருந்தான்.

இனிக்கனிஷ்டனை நோக்குவோம். வடதிசைக்குச் சென்று இவன் வேட்டையாட ஆரம்பித்துக் கொஞ்ச தூரங் காட்டிற்குள்ளேக ஒரு வேங்கை இவனைத்துரத்த வாரம்பித்தது. அது கண்டவ னேடோடியும்போய் கண்ணுக்கெதிர்பட்ட ஓர் கட்டிடத்துட் பிரவேசித்துக் கதவை மூடிக்கொண்டனன். பின்பு புலியானது அவனை விட்டகன்று போய் விட்டது. அப்பொழுது நாழிகை சுமார் 25 இருக்கலாம், அவன் கட்டடத்தை யுற்று நோக்குகையில் அனேக அறைகள் தென்பட்டன. அதைப் பார்த்துக் கொண்டப்புறம் போக கீழ்நோக்கிப்போகு

மொரு சுரங்கவர்சலைக் கண்டு அதன் வழியே போய்க் கொண்டிருக்கையில் சற்று நேரம் இருட்டாயிருந்து பின்பு வெளிச்சமுண்டாக ஆரம்பித்தது. அதென்னவென்க் கவனிக்கும்போது ஓர் ராக்ஷஸன் ஜடை முடியுடன் ஒரு குளத்தின் மத்தியில் தவம் செய்யவும் அக்குளக்கரையைச் சுற்றி நாலுபக்கமுமவனைப் பார்த்த வண்ணமாகவே அனேக அழகுள்ள மனிதர்களுட்கார்ந் திருப்பதையுங்காண, சந்தோஷத்துடன் ஒருவன் பக்கத்திற்போயுட்கார்ந்தான். பின்பவனிடத்தில் வார்த்தையாட நாவெடுக்குமுன் குளத்தின் மத்தியில் தவம்புரிந்துகொண்டிருந்த ராக்ஷஸன் எழ உடனே ஒரு மனிதன் அவன் எதிர்ப்போய் நிற்க, மற்றவர்களவனை விட்டொதுங்கி விட்டது கண்ட ராக்ஷஸன் எதிர் நிற்போன் பேரிற்பாய்ந்து அவனைத் தூக்கிக்கொண்டப்புற மிருந்த ஒரு தோப்பிற்குட் போய்விட்டான். உடனே மற்றவர்களெல்லாம் சுரங்கத்தின்வழியே மேலேறி ஒவ்வொருவராய் ஒரோர் அறைக்குட்போக இவனும் தான் பேசிக்கொண்டு வந்தவனறைக்குட் சென்றான். இவ்வித மிவர்களறைக்குச் சென்ற ஒரு நிமிடத்துக்கெல்லாம் ஆகாராதிகள் கொண்டு வந்து கொடுத்துக் கொண்டுவந்தவர்களி லிவர்களறைக்கு வந்தவன் நீங்களிருவருமோரறைக் குள்ளிருப்பதற்குக் காரணமென்னவென்று வினவ முன்னந்தறைக்குள் ளிருந்தவன் இவரின்று வந்தவரானதால் என்னுடன் பேசிக்கொண்டே வந்து என்னறைக்குள் ளிருக்கிறரென்று சொன்னான். அதைக்கேட்டவன் இவன் பிந்தினவனாதலால் பின்னிருக்கு மறைக்குப் போகவேண்டுமென்று சொல்ல, முந்தினவன் இவர் புதிதானதால் இன்று இராத்திரி மட்டுமிவடத்திலிருந்து நாளைமுதலவர்க்கென்றேற்படு மறைக்குட் போய்விடுவானென்று சொல்லிக்கொள்ள, நல்லதென்றவனுக்கு மாகா

ரஞ் சேர்த்துக்கொடுத்து விட்டுப்போய்விட்டான். உடனே இருவருமாகார மருந்தியபின் புதிதாய்ப்போனவன் முந்தினவனிடத்திலிக்கட்டிடத்தைப் பற்றியும் அந்த ராக்ஷஸ ரிஷியைப்பற்றியும் விசாரிக்க, முந்தினவன் சொன்னதாவது இக்கட்டிடமானது குளத்தின் மத்தியில் தவஞ் செய்யப்பார்த்த ராக்ஷஸ ரிஷியால் கட்டப்பட்டு, மந்திரவேங்கையால் ஆட்களைத் துரத்திவந்து இக்கட்டிடத்திற் சேர்க்கப்பட்ட பின் இதிற் சேர்ந்தவர்கள் அவன் மந்திர சக்தியாலொருவருக்கும் வெளியேபோக மனமில்லாமற் போய்விடுகிறது. பின்பு இராக்ஷஸ ரிஷியானவர் தன் நியம நிஷ்டை முடித்துக்கொண்டு சாயந்திரமாறுமணி நேரத்திற்கு முன்வந்தடைபட்டிருப்பவர்களை வரிசையாய் ஒவ்வொருவராய் புசித்து வருகிறரென்று சொல்லக்கேட்ட ராஜகுமாரன், திடுக்கிட்டு மனஞ்சோர்ந்து பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தான். அதைக்கண்டு முந்தினவன் வதனத்தில் நீர்தெளித்துச் சற்று விசிறி பிரக்ஞை வரும்படிசெய்துவிட்டு நித்திரைபோக; இராஜகுமாரன் தாய் தந்தை தமயன் தங்கை முதலானவர்களின் பிரிவைப் பற்றியும், தன் நிலைமையைப் பற்றியும் நினைத்து நினைத்துருகி இராப்பொழுதைக்கழித்தான். விடிந்ததும் ஆகாரங்கொண்டு வந்தவர்கள் இராஜகுமாரனைப் பின்னுலிருக்கு மறைக்குட் போகச் சொல்லி ஆகாரமளித்தனர். அதையுண்டு குளக்கரைக்கு மற்றவர்களுடன் போனுன். சாயந்திரம் வழக்கம்போல ராக்ஷஸ ரிஷியானவன் ஒருவனைப் பிடித்துக்கொண்டு போனபிறகு சுரங்கத்தின் வழியாய் மேலேறி தன் தன்னறைபோய்ச் சேர்ந்தார்கள். சற்று நேரத்திற்கெல்லாம் சாப்பாடு வந்தது. அதை யருந்திய பின் நித்திரை போனுன். என்றுலும் மனவருத்தத்தினுல் தூக்கம் பிடிக்காமல் பலவிதமா யோசிக்கத் தொடங்

கினன். அதில் முன் தன் தாயாகிய தினமணிக்கு வாக்களித்த பத்திரகாளியம்மையின் ஞாபகம் வந்தது. அவ்வம்மையை மனதிற் சிந்திக்கலானன். உடனே ஈதறிந்த பத்திரகாளி பிரசன்னமாகி மகனே! நீ அஞ்சாதே! நான் உன்னைக் காப்பாற்ற வேற்படுந் தொழிலால் இங்கிருப்பவரிற் சிலருக்கும் இன்னும் வெளியிலுள்ள அனேகருக்கும் நன்மையுண்டாகப் போகிறதென்று சொல்லிவிட்டு மறைந்துபோயினள்.

இவ்விதமிருக்க டில்லிமாநகரில் வசிக்கும் சக்கிரவர்த்தியாகிய தனவந்தனுடைய ராஜ்யத்தின்பேரில் நேபாள ராஜனுகியசம்போஜி தான்படையெடுத்து வருவதாயும் யுத்தத்திற்கு ஆயத்தமா யிருக்கும்படியாயுந் தூதனுப்பினன். அதன்பேரில் உடனே தனவந்தன் தன் மந்திரி பிரதானிகளுடன் ஆலோசிக்க, மந்திரியானவன் நம்மிடமெவ்வளவு சேனைப் பலமிருந்தபோதிலும் துணைவலியின்றி யுத்தம் நடத்துவது கஷ்டமாகுமென்று சொல்லி அடியில் வருமாறு சொல்லலுற்றான்.

உலகிலுள்ள சகலருக்குந் துணைவலி யிருக்கவேண்டியது அவசியம். அரைக்ஷணத்திற் பூமிமுழுமையும் ஜெயிக்கக் கூடிய வல்லவரான ஸ்ரீராமமூர்த்தியானவர் திரிபுவன ஜெயதரரான தம்பியிருந்தும் வானரக்கூட்டங்களைச் சேர்த்துக் கொண்டு இராவண சம்மாரஞ் செய்ததே இதற்கோர் நற்சான்ரும். ஆனபடியால் எவ்வளவு வலிமையோடுங் கூடிய சமர்த்திருந்தாலும் துணைவலி மிகவும் முக்கியமானதென விளம்பலுற்ருன்.

இதனுண்மை யறிந்தபின் மந்திரியின் யோசனையின் பிரகாரம் தன்னுளுகைக்குட்பட்ட வரசர்களை அவர்களுக்

குக் கப்பங்கட்டுஞ் சிற்றரசர்களுடன் யுத்த முஸ்தீப்பாய் உடனே பயணப்பட்டு வந்து தன்னகரஞ் சேரும்படி வுத்தரவனுப்பினன். இவ்வுத்திரவைக்கண்ட சகல அரசர்களும் அவர்களுக்குட்பட்ட சிற்றரசர்களும் யுத்தசன்னத்தராய் பயணப்பட்டு டில்லிமாநகரம் வந்து சேர்ந்தார்கள். இவ்வரசர்களைக் கண்ட தனவந்தராஜனனவன் நாலுதிக்கிற்கும் சேனை யணிவகுத்தனுப்பவேண்டிய திருப்பதால் நாலு சேனதிபதிகள் வேண்டுமே அதற்கு நம்மிடமிருக்குமொருவர் தவிர மற்ற மூவர்களுக்கும் யார்யாரை நியமிக்கிறதென்று மந்திரியுடன் ஆலோசிக்கலாயினன். அப்பொழுது மந்திரி இராஜனைப் பார்த்து இவ்வேலைக்கு உயிருக்குயிராயிருக்கும் நண்பர்களையே நம்பிச் செய்ய வேண்டுமே தவிற மற்றவர்களை நம்பினுற் கெடுதியை விளைவிக்குமென்று அவர்களின் குணுதிசயங்களைப் பற்றி அடியில் வருமாறு சொல்லினன்.

இதிலுத்தம சிநேகரின் குணமென்ன வெனில் தன்னுடன் சிநேகமாயிருந்தவன் நல்லாயிருந்து கெட்டுப்போனல் அவனுடனிவனுமிருந்து சுகதுக்கம் அனுபவிக்கவேண்டும் அது பற்றியே;

நீதிவெண்பா

பாலினீர் தியனுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலுநீர் கண்டமையு மேன்மைபோல்—நூலிநெறி
யுற்ரேரிடுக்கணுயிர் கொடுத்து மாற்றவரே
மற்ரேர் புகல மதித்து. என்றும்;

மூதுரை

அக்குளத்திற்
கொட்டியுமாம்பலு நெய்தலும் போலவே
ஒட்டியுறவாருறவு. என்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

இதற்கோர் திருஷ்டாந்தமாக ஒரு கதை சொல்லுகிறேனென்று சொல்ல வாரம்பித்தான். காசிமா நகரில் ஒரு வேடன் தன் தொழிலாகிய வேட்டையாடுகிறதற்காக அம்புகளில் விஷயத்தைத் தோய்த்து பக்ஷிகளிருக்கும் மரத்தின் மேலெய்து மரங்களையெல்லாம் இலை, பூ, பிஞ்சு, காய் முதலானது களுதிர்ந்து மொட்டையா யிருக்கும்படி செய்துகொண்டு வந்தான். இவ்விதம் ஒருநாள் கங்காநதிக் கரையோரத்திலிருந்த ஒரு மரத்தையும் அம்பினாலெய்து பாழாக்கினான். அப்பொழுது அம்மரத்தில் வாசம்பண்ணிக் கொண்டிருந்த கிளியானது நன்றாய்த் தழைத்துப் பூத்துக் காய்த்திருந்த மரமானது திடீரென்று பட்டுப்போனதைக் கண்டு, இம்மரம் நன்றாயிருக்கும்போது இதன் பழத்தைத் தின்று பிழைத்திருந்தோ மல்லவா இப்பொழுது இழைத்துப்போய் விட்டதென்று அதைவிட்டு நீங்கி வேறு மரத்திற்குப்போய் வாசஞ்செய்வது உசிதமல்லவென்று அதிலேயே இருந்து மழைக்கு நனைந்தும், வெயிலுக் காய்ந்தும், குளிரைச் சட்டைபண்ணாமலும், இடி மின்னல் காற்று முதலியவைகளுக்குப் பயப்படாமலும், கவலைப்படாமலும், நன்றிகுன்றால் பழமையைப் பாராட்டி அம்மரத்திலேயே யிருந்து தேகங்குன்றி தன் வாழ்நாளைக் கழித்தது.

திருக்குறள்.

"கெடுங்காலங் கைவிடுவோர் கேண்மை
யடுங்காலையுள்ளினு முள்ளுஞ் சுடும்"

அப்படிப்போலிருக்கும் சிநேகர்களைத் தெரிந்தெடுத்து அனுப்புவது உசிதமாயிருக்குமென்று சொன்னான். அவ்விதமே மந்திரியும் ராஜனுங்கூடி யோசித்து விநோதபுரி அரசனை திசிலனையும் வேறிருவர்களையுந் தெரிந்தெடுத்துக் கொண்டு எந்தெந்த திசைக்கு யாரை யனுப்புகிறதென யோசி

க்கலாயினர். வடதிசையில் நிற்பவன் பலவானும் வில்வித்தையிற் றேர்ந்தவனுமிருக்கிறபடியாலவனுக்கு எதிர்நின்று சாதிக்கத்தக்கவன் திசிலனென்றும், கீழ்திசையில் நிற்பவன் யுக்தியால் வெல்லக்கூடியவனாதலால் அவனுக்கெதிராய் நம்முடைய சேனாதிபதி நிற்கவேண்டு மென்றும், மற்றிருவர்களை மற்றிரண்டு திசைகளுக்கு மனுப்புகிற தென்றும் பேசித் தீர்மானித்து அவ்வித மனுப்பலானார். உடனே சேனாதிபதிகள் தனக்குத்திரவு கிடைத்தபடி அத்திசைகளுக்கு மேளதாளம் வெடி தடி தப்பட்டை எக்காள முதலிய வாத்தியத்துடன் செல்லலுற்றனர். இச்சத்தங்கேட்ட எதிரிகள் யுத்தா யுத்தராய் வந்து சமர்பொருத ஒவ்வொருவரும் வில்வளைத்து நாணேரிட்டு நாகம், வாளி, முதலிய பலவிதமான அம்புகளையும், விசிகம், புரளம், பகளி, என்னும் பாணங்களையும், ஈட்டி, பாங்கு, பாலா, சங்கு கோதண்ட பிண்டிபாலம் பூம்படை, வேலாயுதம், சூலாயுதம், வட்சிராயுதம், கூர்வாள், உடைவாள், கடைவாள், குருந்தபடி முதலிய பலவித ஆயுதங்களுங்கொண்டு இருகக்ஷிகளும் சமர்பொருவதைப் பார்த்து அங்கியர்கள் முந்நாளில் தந்தைக் குபதேசஞ்செய்த கந்தன், கடம்பன் கார்த்திகேயன் என்று சொல்லும் சுப்பிரமணியக் கடவுளும் சூரபத்மாவும் போர்புரிந்ததையொக்குமெனச் சொல்லும்படி யிருந்தது. தவிரவும் இந்த யுத்தத்தில் இருக்க்ஷியிலு மிறந்த சேனைகளின் உறுப்புக்கள் அறுபட்டு அதன்வழியாக ஒழுகிய இரத்த பிரவாகமானது அந்த ரணக்கள முழுவதும் நிறைந்து எங்கே பார்த்தாலும் சிவந்த நிறமாக தோற்றுவது யெப்படி யிருக்கிறதென்று சொல்லலாமென்றால்; முன்னொருநாள் மாலைப்பொழுதில் செவ்வான மிட்டிருக்கிறபோது ஆகாயவாணியானவள் பூமிதேவியை நோக்கி அடி மண்ணுக் ரசியே! நான் கட்டியிருக்

கும் சிவப்புப்புடவையை நோக்குவாயாகவென்று சொல்லி யதை மனதில் வைத்திருந்த பூமிதேவியானவள் இந்த யுத் தத்தில் இரத்தவெள்ளம் கரைபுரண்டோடும்போது பூமி தேவி ஆகாயவாணியைப் பார்த்து அடி விண்ணுக்கரசியே! உனக்குத்தானா சிவப்புப்புடவை கிடைக்கும், நானுமின்று சிவப்புப்புடவை கட்டியிருப்பதைப் பாரென்று சொன்னது போலிருந்ததாம். இவ்விதம் போர்புரிந்ததின் பலனாகக் கடைசியில் திசிலராஜன் எதிரியின் சேனைகளை ஹதம்பண் ணின களைப்பினிமித்தம் சோர்வடைந் திருக்கும்போது எதிரி இவனைத்தேரோடு கட்டிக்கொண்டு போய்விட்டான். இதையறிந்த தனவந்தன் அவனை விடுவிக்குமாறு வேண் டியபிரயத்தனங்கள் செய்தும் பயன்படவில்லை. எதிரி திசிலராஜனை தன் காவலாளியுட னனுப்பிவிட்டு மறுபடி யுத்தஞ்செய்தான். இவ்விதம் பல நாள் யுத்தம் நடந்து கடைசியாய் தனவந்த ராஜனுக்கே ஜெயங்கிடைத்தது. திசில ராஜனை சிறையில் வைத்து பாதுகாத்து வந் தார்கள். இச்சமாசாரம் விநோதபுரிக்கெட்ட தினம ணியானவள் தன்னிரு கண் மணிகளான குமாரர்கள் வேட்டைக்குப் போயிருவரும் திரும்பிவராதிருக்க அதற் காக வியாகுலமடைந்து கொண்டிருக்கையில் "பட்ட காலி லே படும் கெட்டகுடியே கெடு" மென்று சொல்லும் பழ மொழி போல தன்னாயகனை நேப்பாளதேசத்தரசன் சேனா திபதி யுத்தமுகத்தில் தேரோடு கட்டிக்கொண்டு போய்வி ட்டானென்று தெரிய, எரிகிற அக்கினியில் எண்ணெவார்த் தது போல இருந்தது. இன்னும் இதை வாசிக்கும் நண் பர்களே தினமணியின் மனமிருக்கும் வித்ததை யோசிக்க வண்டும். இச்சமாசாரமெல்லாம் கேட்ட அலந்தலையானவள் தன் பத்தாவிடம் உத்திரவு பெற்று விநோதபுரி வந்து சேர்ந் தனள். இவளைக் கண்டதும் அவள் திடீர் திடீரென்று அடி

வயற்றிலரைந்துகொண்டும், ஹா! ஹா!! வென்றும் முகத்திலரைந்துகொண்டும், ஈசா என்னை இக்கதிகளாக்கினையே! ஏ பத்திரகாளி! உன் வாக்கு பொய்த்ததோ வென்று பல வாறு சித்தப் பிரமை கொண்டவள்போலப் புலம்பலானாள். இதைக்கண்ட அலந்தலை நாளொரு பெண் பிறந்ததால் இராஜ்யத்திற்கு கெடுதிவாய்ந்தது மல்லாற் பேற்றோர்களவதிப்படுவதைப் பார்த்தும் உடன்பிறந்தார் போனவழி தெரியாமலுமிருக்கிறதைச் செவியுற்றுமிருந்து அடையும் பலன் யாதொன்று மில்லை. ஆனதால் என்னுயிரை மாய்த்துக் கொள்வதே சரி யென்று உத்தேசித்து தாயண்டை போய் தான் அக்கினிப்பிரவேச மாகிறதற்கு ஒரு அக்கினிக்குண்டந் தயாரித்துக் கொடுக்கும்படி சொல்லினள். இதைக்கேட்ட தினமணி அனற்பட்ட மெழுகுபோல் மனமுருகி இடிமேலிடிவிழுந்தாற்போ லிருக்கிறதென்று எண்ணி தனக்கு வரங்கொடுத்த பத்திரகாளியை நினைத்து அடியில் வருமாறு துதிக்கலானாள்.

லாவணி

1. ஆரணி மாதங்கி யோகினி மாகாளி ஆளி பைரவி தேவி
நாரணி சூலி மாலினி மாதிரி நான் தொழ வந்தருள்வாய்.
2. சண்டி சாமுண்டி ஜயமுகக்கண்ணி சாமளை கௌரி வீரி
எண்டோலி மதுபதி இடாகினி பங்காளி என்குறைதீர்க்க வா
[வா
3. நித்திய கல்யாணி நித்ய விநோதினி நிரந்தர பரிபூரணி[ராய்
பத்தியாயுந் தனைப்பரிவுடனேற்றிடும் பாவை முன்னோடிவா,
4. எந்தாயுன்மன இரங்கியருள்செய்திட இது தருணந்தருணமே
வந்தாதரித்தென்னை மகிட்சியுடனிருக்க வரமருள் மகேஸ்
வரியே!

உடனே பத்திரகாளி பிரசன்னமாகி என்னைத் துதித்த காரணமென்னவென்று கேட்க தினமணி முதலில் தன்

பிள்ளைகளிருவரும் வேட்டைக்குப் போனவர்கள் திரும்பவ ராததைப்பற்றியும், யுத்தத்திற்குப் போனவிடத்தில் தன் பத் தாவைத் தேரோடு கட்டிக்கொண்டுபோய் நேப்பாளராஜன் தன் தேசத்திற் சிறை வைத்திருப்பதைப் பற்றியும் நீங்காத் துக்கததிலிருக்கு மிச்சமயத்தில் யென் பெண்ணான வள் தான் பிறந்ததி னிமித்தம் இவ்விதக் காரணங்களேற் பட்டதால் அக்கினிப் பிரவேசமாக வேண்டுமென்று அக் கினி குண்டந் தயாரிக்கச் சொல்லுகிறாள். நீ எனக்குமுன் வாக்குக் கொடுத்தபடி சகல இடர்களையும் தீர்க்கவேண்டிக் கொள்கிறேனென்றாள். அது கேட்ட பத்திரகாளியானவள் பெண்ணே, நீ யொன்றுக்கு மஞ்சவேண்டாம் பிரார்த்துவ மானது ஒருவரையும் விடாதென்று அதைப்பற்றிச் சொல்ல லுற்றாள்.

நாமெடுத்திருக்கிற உடலானது முன ஜெயதருக்கும் இருவினைகளும் தீர்ந்தவுடன் ஆன்மா உடலைவிட்டு நீங்கிப் போகும். உடனே அவனவன் வினைக்குத் தக்கபடி ஒருமா யா தேகத்தில் ஆன்மாவையடக்கி எமதூதர் எமனிடங் கொண்டு போவார்கள். அவன் நல்வினையாளரை நற்கதியா லும், தீவினையாளரைத் தீக்கதியிலுஞ் சேர்ப்பான். இதில் நல்வினை தீவினை எவ்விதமுண்டாகிறதென்றால் ஒருவனுக்கு மனம் வாக்கு காயமென்கிற மூன்றினாலுண்டாகிறது.

இதில் ஆசை காமப்பற்று கொலை செய்ய நினைத்தல் முதலியவை மனத்தின் தீக்குணம். பொய் சொல்லல் கோட் சொல்லல் கோபித்துச் சொல்லல் முதலியவை வாக்கின் தீக் குணம். களவாடப் போதல் கொலைசெய்தல் முதலியவை காயத்தின் தீக்குணம்.

பின்பு நற்குணங்களேதவை யென்றால்:—ஆசையறுத்தல் அருளினவு தவப்பற்று முதலியவைகள் மனதின் நற்கு

ணம். மெய்யுரைத்தல் நல்வார்த்தை பேசுதல் இனியவை கூறல் முதலியவைகள் வாக்கின் நற்குணம். தவம் புரிதல் கோயில் வலம்வருதல் தானஞ் செய்தல் முதலியவைகள் காயத்தின் நற்குணம். முன்காலத்தில் உடல்களை ஏற்படுத்திய நாள் முதற்கொண்டு குற்றமும் பொய்யு மில்லாதிருந்தது. அதினால் உயிர்களுக்கு நன்னெறி நீதி ஈகை சாந்தம் பொறுமை உண்மை நியதி ஆசாரம் இவைகள் வித்தியாசமின்றி பெரியவர்களை வணங்கி அன்றன்று செய்யுங் காரியங்களை ஈஸ்வரார்ப்பிதஞ்செய்து வந்தார்கள். அதினால் அவர்களுக்கு நித்தியவைப செல்வங்கிடைத்ததென்று முன்னூலால் தெரியவருகிறது. அத்தருமங்கள் க்ஷீணதசையடைய ஆரம்பித்துவிட்டதினால் பாவங்கள்மேற்பட்டு அவரவர்கள் செய்த நல்வினை தீவினைகளுக்குத் தக்கபடி அனுபவிக்கலாச்சுது. அது எவ்வாறெனில் தாய்தந்தைகள் அண்ணன் தம்பிகள் பசியினால் துன்பப்படத் தான் புசித்தும் பிச்சை செய்யாமலும் ஏழைகளை எதிரியாக்கிச் சண்டைபோட்டுத் திரிவார்கள். வறுமையால் நொந்து ஊரூராய்த் திரிந்து இரந்து திரிவார்கள், பின்பு அவரவர்கள் செய்திருக்கும் பாவங்களுக்குத் தக்கபடி உழன்று மரிப்பார்கள். மரித்தவுடன் அவரவர்கள் மனசையும் நல்வினை தீவினைகளையும் ஆராய்ந்து அதற்குத் தக்கபடி மீண்டும் சிருஷ்டிக்கப் படுவார்கள். ஆனால் பூர்வத்திற் செய்த புண்ணியபாவ என்பதற்கு ஈடாய் பஞ்சதிருத்தியமும் நடத்தும். முன் சென்மத்திற் செய்த புண்ணியபாவங்களுக்குத் தக்கபடி இச்சென்மத்திலனுபவிக்கும் பலன்களுக்கு கர்மமென்று பெயர். மானிடஜென்மமெடுத்த ஒருவன் முக்கியமா யடையவேண்டியது ஞானமே. அதுவின்றி சுகத்தையே நாடுகிறார்கள். ஆனால் சுகத்திற்கு முடிவுண்டு ஞானத்திற்கு முடிவில்லை. சுகமுள

விடத்துத் துக்கமுண்டு. உதாரணமாக பிள்ளைகள் பிறக்கும்போது சந்தோஷிக்கிறோம். ருஜியான பதார்த்தங்கள் பக்ஷணங்கள் தின்னக்கிடைத்தபோது சந்தோஷப்படுகிறோம். அது கிடையாதபோது துக்கப்படுகிறோம். சிலர் பணக்காரரா யிருக்கிறவர்களுக்கு எப்போதும் அறுசுவை உண்டி கிடைக்கவில்லையா யென்று சொல்லக்கூடும். ஆம் அதற்கு அவர்களுக்குப் பல இடையூர்களினால் சாப்பிடத் தடைப்படும். அதென்னவெனில் முக்கியமாய் ஏழைகளைப் போல அவர்களுக்குப் பசியிராது. அடிக்கடி சீக்கு நேரிடும். விலைமாதருடன் கூடி இரவெல்லாம் சுகமனுபவித்த ஒருவன் மறுநாளே வியாதியாய்க் கஷ்டப்படுகிறான். இத்யாதி காரியங்களினால் சுகமுண்டானவிடத்தில் துக்கமும் குடியிருக்குமென்பது திண்ணம். ஆனால் இப்பிரபசஞ்த்தில் சுகதுக்கமிரண்டும் நம்மை நல்வழியிற் செல்லென்னுமாசான்கள் என்பதிற் றடையில்லை.

கைவல்யம்.

பஞ்சினை யூழித்தீப்போற் பலஜென்மவிவிதவித்தாம்
சஞ்சித மெல்லாம் ஞானத்தனல் சுட்டு வெண்ணீறாக்கும்
கிஞ்சிலா காமியந்தான் கிட்டாமல் விட்டுப்போகும்
மிஞ்சின பிராரர்த்துவத்தின் வினை யனுபவித்தே தீரும்.

ஆனதுபற்றி அவ்ரவர்கள் வந்த வினைப்படி அனுபவிப்பார்கள். அதற்காக நாம் துக்கத்திற் மூழ்கியிருப்பது மதியீனமன்றோ. காலம்வரின் துக்கமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கிவிடும். இன்னம் இரண்டு மாசத்தில் உன்னைவிட்டுப் பிரிந்திருக்குஞ் சகலரும் வந்து சேருவார்கள். அஞ்சவேண்டா மென்று சொல்லி மறைந்து போயினள்.

இவ்விதம் சொல்லிவிட்டுப் போன பத்திரகாளி யானவள் இனி அவர்களையெல்லாம் ஒன்றுசேர்க்கவெண்ணி முதலிற் சிரேஷ்டனைப் பற்றி யோசிக்கலானாள். ராக்ஷஸன் சிறுவனி டத்தில் தன்னுயிருள்ளளவும் நீ யென்னைவிட்டு நீங்கப்படா தென்று உண்மைவாங்கி யிருக்கிறபடியால் ராக்ஷஸனைக் கொன்றாலொழிய சிறுவன் மீளுவதற்கிடமில்லை. ஆனதாலதற்கு வேண்டியதைச் செய்வோமென்று பலவிதமாயாலோசித்து கடைசியாய் அவனோடு நேரில் சமர்புரிந்தே கொல்லவேண் டுமென்று தீர்மானித்துக்கொண்டு அத்திசை நோக்கி நடந்த னள். பத்திரகாளியானவள் விடிந்து பத்து நாழிகைக்கெல்லா ம் ராக்ஷஸனிருப்பிடஞ் சேர அப்போது அவன் வெளியே போகிற சமயமாயிருந்தது. இவளைக்கண்டதும் நீ யார்? இங்கு வரக்காரணமேன்? உள்ளதை யுள்ளபடி சொல்லாவிடில் இதோ உன்னை பக்ஷிக்கிறேனென்று சொல்ல பத்திரகாளியா னவள் அடே துஷ்டா? உன்னிடமிருக்குஞ் சிறுவனை என்னு டனனுப்பத்தடைசொல்வாயானால் இக்ஷணமே உன்னுயிரை ப் போக்கி உதிரத்தையும் போக்குவேனென்று சொன்னாள். அவனுக் சாக்கிரகமுண்டாகி மேல்விழுந்தடிக்க வாரம்பித்த னன். இதைகண்ட பத்திர காளியானவள் நகைத்து முன் ஈஸ்வரனால் வரம்பெற்றும் அநேக சேனைகளையு முடைத்தா யிருந்த மகிடாசூரனைக்கொன்றவென்னை எதிர்த்தது உன்னு யிரை இழக்கும் பொருட்டே என்று சொல்லியுத்தமாரம் பிக்க, அவன் பலமிருகங்களாகவும் பக்ஷிகளாகவும் மரங்களா கவும் மாயமாய் மறைந்து சண்டை செய்தனன். ஜீவர்களை ரக்ஷிக்கும்பொருட்டாயும் தானளித்த வாக்கு சோர்வாகாம லிருக்கும்படியாயும் ராக்ஷசனைக் கொன்றாள். இதெல்லாவற் றையும் பார்த்துக்கொண்டிருந்த ராஜகுமாரன் பத்திரகாளி க்கு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து எழுந்து ஆக்ஞையை

எதிர்பார்த்து நின்றான். அப்பொழுதவன் ஒரு பெரிய தபசி போலக் காணப்பட்டான். என்னெனத்தினுலெனில் வபனம் ஸ்நானமுதலானது களில்லாததினு லவ்விதந் தோற்றப்பட்டான். அவனைக் கூப்பிட்டு பத்திரகாளியானவள் உடனே புறப்பட்டு உன் வீடுபோகாமல் என் ஆலயத்திற்கு வாவென்று சொல்லி மறைந்துபோயினள். அவள் சொன்னபடி பிரயாணப்பட்டு வந்து தன்னூர் காளிகோவில் சேர்ந்துகோவிலை வலம்வந்து அம்மனை நமஸ்கரிக்க, அவள் சிறுவனைத் தீர்க்காயுளாயிருப்பாயென்று வாழ்த்தி நானினி உன் வீடு போகச் சொல்லும்வரை இவ்வாலயத்தை விட்டப்புறம் போகாமலிருக்கக்கடவாயென்றும், அதுவரை ஆகாராதிகள் முதலான சகல வஸ்துக்களும் கோவில் பூஜாரியை கொடுக்கத் திட்டஞ்செய்திருப்பதாயுஞ் சொன்னாள். அதின்படி சிரேஷ்டனிருக்கிறான்.

## 2 வது அத்தியாயம்

இனி பத்திரகாளி இராஜனைக்கொண்டு வரவேண்டுமென்று தீர்மானித்து அவனைச் சிறைவைத்திருக்குந் தேசத்திற்குப் போய் அந்த அரசன்மகனைப் பைத்தியம் பிடிக்கச்செய்தனள். அதைக்கண்ட அவனுமவன் மனைவியும் மிக்க மனம் வருந்தினவர்களாய் தன்னொரு மகனுக்கு இவ்வித மீசனெழுதிவிட்டானே என்றும், நாம் சும்மாவிருக்கக்கூடாதென்று இவ்வியாதியை எந்த விதமாயாவது அதாவது மந்திரத்தினுலோ மருந்தினுலோ தீர்ப்பவர்களுக்கு அவர்களெதைக்கேட்டாலுங்கொடுக்கச் சித்தமாயிருக்கிறேனென்று அவ்விராஜனுல் பறைசாத்தப்பட்டது. இதற்கு மத்தியில் காவலிலிருக்கு மரசனை ஒரிராத்திரி பத்திரகாளி போய் எழுப்பி உன்னை இன்னமொருவாரத்திற்குள் வெளியாக்கி

விடுகிறேனென்று சொல்லி மலைறந்தனள். இதனாலவனுக் குச் சற்று தைரிய முண்டாகி, தன் பெண்டு பிள்ளைகளைப் பார்க்கலாமென்றிருந்தான். பின்பு பத்திரகாளியானவள் ஒரு விருத்தாப்பிய பெண் வடிவு கொண்டு அவ்விராஜனின் அர ண்மனைக் கேகினள். அப்பொது வாயற்காவற்காரர்கள் எங் கேபோகிறாயென்று வினவ, அவள்ராஜகுமாரரின் வியாதி யைத் தீர்க்கு முத்தேசத்துடன் போவதாய்ச் சொன்னாள். அது கேட்டவர்கள் டாக்டர் முதலான பெரிய பெரிய வைத்யர்கள் எல்லாரும் போய்ப்பார்த்துந் தீராத நோயை பைத்தியகாரியைப் போலிருக்கும் நீயா சொஸ்தம் பண் ணப்போகிறாய் சீச்சீ போவென்று வெளியே தள்ளினார்கள். அப்பொழுது அவள் கோவென்று பெருங் கூச்சலிட்டு அர சன் உப்பைத்தின்று கொண்டு அவனுக்கே தீங்கு செய்கி றீர்களே பாவிகாள்! ஒருப்புத்தந்தவரை உயிருள்ளளவும் நினையென்ற பழமொழி யிருக்க நீங்களிப்படிச்செய்வது நியாயமில்லை யென்று இடிமுழக்கம் போல் பேசினாள். இவ் விரச்சலைக்கேட்டரசன் ஆசார வாசலிலென்ன சப்தமென்று கேட்க, ஒருவனோடிப்போய் கிழவி வந்ததையும் தாங்கள் மறித்ததையும் அதற்கவள் சொன்னதையும் விபரமாகச்சொ ன்னான். அது கேட்ட வரசன் அப்பா சிப்பினுள்முத்திருக் கிறது, அதிகவாசனை யுள்ளதும் ராஜராஜாக்கள் விரும்பக் கூடிய புனுகு ஜவ்வாதும் எவ்வளவோ கேவலமான ஸ்தான த்திலிருந்து எடுக்கப்படுகிறது. அழுக்கிற்குள்த்தான் மாணி க்கமும் முத்துமிருக்கு மென்று கேட்டதில்லையா குருடனுக் குக் கண்தானே வேண்டுமென்று சொல்வது போல நமக்குப் பிள்ளையின் வியாதி தீரவேண்டுமேதவிர யாராயிருந்தால் நமக்கென்ன, உள்ளே அனுப்பிடுவாயென்று சொல்ல, உட னே அவளை ராஜன்முன் கொண்டு வந்து விட்டார்கள். கிழ வியானவள் அரசனை நோக்கி வேந்தே? உன்குமாரன்

வியாதியைத் தீர்த்து விட்டாற் கொடுக்கும் பரிசை சொல் வாயெனக் கேட்டாள். அப்பொழுதவன் நான் முன்னமே யே பரைசாத்தியிருக்கிறேன் அதாவது "அவர்களெனதைக் கேட்டாலுந் தடையின்றிக் கொடுக்கச் சித்தமாயிருக்கிறே னென்பதே" என்று சொன்னன். அப்பொழுது கிழ வியானவள் மன்ன? உலகில் ஜனித்த மானிடரியாவரு ந்தன்மனதை ஓர் நிலே நிறுத்தி ஒடாமலடக்கி சர் வதயாளுவாகிய ஈஸ்வரனை நோக்கித் தவஞ்செய்தால் நா மெதைக் கருதிச்செய்தோமோ அது கிட்டும். பின்னதை அததற்குள்ள நீதிதவருமல் நடக்கவேண்டும். அப்படிக்கின்றி விரோதமாய் நடந்தால் துன்பம்நேரிடும். அதுபோலநீ முன் ஜென்மத்தில் அநாதி நாதனை அன்போடு அருந்தபசு செய்து கண்டு இச்சிம்மாசனம் பெற்ருய். நீசெல்வத்தினுலாணவப்ப டாமலும்,நீதிகுன்ருமலும், தருமத்தை மறக்காமலும், ஏழை களுக்கிடர் செய்யாமலும், சமயபேதம் ஜாதிபேதமில்லாமலு ம், கோபமாற்சல்யங்களேப் போக்கியும், சமருக்கிளேக்கா மலும், பின்காட்டியோடாமலும், அப்படியோடினவர்களேத் துன்பப்படுத்தாமலும், தூதுவர்களேச் சிறைப்படுத்தாலும் சண்டைசெய்து நிறுத்திப்பின் சும்மாவிருக்கும்போது எதி ர்த்தவரசனேப் பிடித்துக் கொள்ளாமலுமிருக்கவேண்டியது. இதிலொன்று பிசகினுலுங் குற்றமே என்று கிழவிசொல்ல; அரசன் நான் நீதிக்கு விரோதமாக ஒன்றுஞ் செய்யவில்லே யே என்று சொல்ல, கிழவி நல்லது நீ அப்படி செய்திருப்ப தினிமித்தந்தான் உன் பிள்ளேக்கு இவ்விதவியாதி வந்து மன வருத்த மடைகிருயென்று சொல்லி அதைவேண்டுமானுலும் சொல்லுகிறேன் கேளென வாரம்பித்தனள். சற்று நேரம் சும்மாவிருந்து கையிற் கொஞ்சம் விபூதியெடுத்து வானத் தைப் பார்த்தெரிந்து விட்டு மைந்தா? நீ நேப்பாளதேசத் தர

சனுக்கு தவியாய்ப்போனதில் உன்னை யெதிர்த்த விநோத புரியரசன் களைத்திருக்கும்போது போய்க்கட்டிக் கொண்டு வந்து காவிலில் வைத்திருக்கிறு யல்லவா வென்றுள். அதுகேட்டவரசன் திகில்டைந்து சும்மா விருக்க, உண்டா! வில்லையா? உண்மையைச் சொல்லவேண்டு மென்றுள். அரசன் ஆமென ஒப்புக்கொண்டு அந்தத் தப்பிதத்திற்காக தாங்கள் என்ன பிராயச்சித்தஞ் செய்யச் சொன்னுலுஞ் செய்கிறேன். என்னருமைக்குளவியின் நோயைத்தீர்த்து விடவேண்டுமென்று கிழவியை வேண்டிக்கொண்டனன்.

அதைக்கேட்ட அவள் என்னசெய்கிறதென் ருலோசித்து நீ சிறைவைத்திருக்கு மரசனை இங்கு கொண்டுவந்ததின்பின் னதற்குப் பிராயச்சித்தஞ் சொல்லுகிறேனென, இராஜனுடனே திசிலராஜனைச் சிறைக் கூடத்திலிருந்து வரவழைக்க பத்திரகாளி திசில ராஜனைப் பார்த்து அடியில் வருமாறு கேட்கலானுள்.

ப. உனக்கெந்த வூர்?

தி. விநோத புரி.

ப. உன் பெயரென்ன?

தி. திசிலன்,

ப. நீ என்னஜோலி பார்க்கிறுய்?

தி. விநோதபுரியைக் கார்க்கும் வேலை.

ப. நீ என்ன குலம்?

தி. க்ஷத்திரிய குலம்.

ப. அப்படியானுல் விநோதபுரிக் கரசனு?

தி. ஆம்.

ப. நீ சிறையிருக்குங் காரணமேன்?

தி. நான் தனவந்த ராஜனுக்காகவும் இவர் நேபாள ராஜனுக்காகவும் யுத்தஞ் செய்கையில் நான் யுத்தத்தை நிறு

த்திக் களைப்புண்டிருக்கும்போது இவர் என்னைக் கபடமாகப் பிடித்து ராஜரீகத்திற் கடுக்காத வேலை செய்திருக்கிறார்.

ப. அப்படியானால் நீ கையாலாகாதவனா?

தி. அப்படியன்று; என்னை யிவரிடத்திற் கேட்டாலே தெரியும். நான் வில்லைக் கீழேவைத்து களைப்பினால் வருத்த மடைந்திருக்கையிற் பின்னாற் கூடி சில ஸேனைகளை யனுப் பித் திடீரெனமேல்விழுந்து கட்டிக்கொண்டபின் என்ன நடக்கக்கூடும்.

ப. ஆனாலிது உங்கள் ராஜநீதிக்கு விரோதமா!

தி. ஆம்.

ப. உடனே பயித்தியம் பிடித்த பையனின் தகப்பனை ப்பார்த்து இது சரியா தப்பா?

அ. சரிதான்

ப. அப்படியானால் நீ செய்தது நீதிக்கு விரோதந் தானே?

அ. ஆம்.

ப. அதற்கு கடவுள் உனக்குத் தண்டனை விதித்திருக் கிறார். இப்பொழுதென்ன சொல்லுகிறாய்?

அ. தாங்கள் சொல்லும்விதம் நடக்கச் சித்தமாயிருக் கிறேன்.

ப. சரி நீ இப்பொழுது ஒரு பட்டாளச் சேனையுடன் அவனை அவன் தேசத்திற்குக் கொண்டுபோய் விட்டு அவ னிடத்தில் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள விருப்பமிருந்தால் உன் பிள்ளையின் வியாதியைத் தீர்க்க முடியுமென்றாள்.

அ. அவ்விதமே செய்கிறேன்.

ப. உடனே தயார் பண்ணவும், நீ அவனுட னனுப் புஞ்சேனையை யவனுக்குக் கொடுத்துவிட வேண்டும். ஏனெ

னில் அவன் சேனைகளையெல்லாம் நீ யடித்துவிட்டதற்கு பதிலாகக் கொடுப்பதுந்தவிற, உன் பொக்கிஷத்திலிருந்து ஒருவருஷத்திற்கு வேண்டிய சேனைச்சிலவும் கொடுத்து விடவேண்டும், சம்மதமா?

அ. அப்படியே செய்கிறேனென்று மந்திரி! உடனே ஓர்பட்டாளஞ் சேனையும், அதற்கு ஒரு வருஷத்திற்கு வேண்டிய பணமுந் தயார் செய்யவேண்டுமென்று சொன்னான்.

ம. அவ்விதமே அரைக்ஷணத்தில் தயார் செய்கிறேன்.

அ. கிழவியைப் பார்த்து தயாராய்விட்டது இனிச் செய்யவேண்டியது என்ன?

ப. சிறையிலிருந்தவனை வபனஞ் செய்யச் சொல்லி ராஜயோக்கியமான உடை உடுத்தி போஜனஞ் செய்வித்து பயணப் படுத்தட்டும்.

அ. மந்திரி! சிறையிலிருந்த வரசனைவபனஞ் செய்வித்து என்னுடைய உடைகளில் நேர்த்தியான ஒரு ஜதை உடைகொடுத்து உடுப்பித்து பின்பு நல்ல போஜனந் தயார் செய்து, அவரை உண்ணச் செய்து, சேனைகளையும் பயணத்திற்குத்தயாராகும்படி திட்டஞ்செய்.

ம. அவ்விதமாகுக. உடனே கிசீலனை யழைத்துக்கொண்டு போய்ச் சகலமுஞ் செய்வித்து ஆயத்தமாய்விட்டதென்று இராஜனுக்கறிவித்தான்.

அ. கிழவியண்டைபோய் அம்மா அவரைத் தாங்களும் கூடவந்திருந்து வழியனுப்பவேண்டுமென்று சொன்னான்.

ப. உன் மகனை யிங்குகொண்டு வரச்சொல்.

அ. ஆரடா அங்கு நிற்கிறவன்.

சே. மகாராஜா சேவுக்கன் நிற்கிறேன்.

அ. நீ மந்திரியிடஞ் சொல்லி நமது குழந்தையை யிங்கு கொண்டு வரச்சொல்.

சே. சுவாமி, மகாராஜா சின்ன மகாராஜாவை அங்கு கொண்டுவர உத்திரவாபிருக்கிறது.

ம. நல்லது அப்படியே செய்வோம்.

அ. தாயே குழந்தையைக் கொண்டுவந்திருக்கிறேன்.

ப. விபூதி யெடுத்து பையனின்சிரசிற்போட்டு அநீதியாகிற பேயே இன்றுமுதலிவனருகில் வராமலும் இக்குடும்பத்தி லொருவரையும் வந்தடுக்காம லிருப்பாய். இக்ஷணமே இங்கு நில்லாமல் ஓடிப்போவென்று ஒரு சப்தமிட்டாள். அப்பொழுதே சிறுவனுக்கு சுயபுத்தி வந்து தகப்பனிட மொதுங்கிப் போய் நின்று கொண்டு இக்கிழவியாரென்றும் அவளண்டை உமக்கு என்ன பேச்சென்றும் சிறுவன் கேட்டான்.

அ. அப்பா குழந்தாய் உன் குலதெய்வமாகிய இந்தம்மாளை வலம் வந்து நமஸ்கரி யென்றான்.

கு. என் நான் அவ்விதஞ் செய்யவேண்டும்.

அ. நீ ஒரு வருஷக்காலமாய்ச் சித்தப்பிரமை கொண்டிருந்தாய். நானு மெவ்வளவோ வைத்தியஞ்செய்து பார்த்தேன் ஒன்றிலும் பலிக்கவில்லை. கடைசியாய் இந்தத்தாய் தானுன்னை இவ்விதம் பேசும்படி செய்தனளென்றான்.

கு. ஆனல் நானவளுக்கு நீர் சொல்லியபடி செய்யக் கடமைப் பட்ட வந்தானென்று வலம் வந்து, நமஸ்கரித்து முன் நின்றான்.

கி. தீர்க்காயுளாயிருக்க வேணுமென்று நெற்றியில் விபூதியைப்பூசி திசிலனையுங் கூப்பிட்டு நீ உன்தேசம்போய்

சகல சம்பத்துடனும் இவர்கொடுக்குஞ் சேனையையும்வைத் துக்கொண்டு வாழக்கடவாயென்று வாழ்த்தி யனுப்பினாள்.

அ விநோதபுரிக்கரசே நான் தங்களுக்குச் செய்த குற்றத்தை மன்னித்து, துவேஷம் வையாமல் நாமிருவரும் சிநேகத் தன்மையாயே இருக்கவேண்டு மென்றுசொல்லி வழியனுப்பினான்.

அரச ராக்கினையின்படி மந்திரி விநோதபுரிக்குப் பிரயாணப்பட்டு மூன்றும் நாளிரவில் சுமார் 10, 11 மணிக்கு விநோத புரிவந்து சேர்ந்து அரண்மனைக்கு திசிலன் போகலுற்றான். அப்பொழுது ராணியானவள் தன் பத்தாவையுங் குமாரர்களையும்பற்றி பரிதபித்துக் கொண்டிருந்தாள். அதைச் சற்று நேரங் கேட்டுக் கொண்டிருந்து பின்பு அவள் படுத்திருக்கு மறைக்கதவைத் தட்ட, அவள் பேயோ பிசாசோவென்று பயந்து சும்மா விருக்கப் பின்னுங் கொஞ்சம் உரத்த சப்தமாய்க் கூப்பிடலானான். பக்கத்துவறையிற் படுத்திருந்த நவமணியானவள் கேட்டுத் தன் கதவைத் திறந்து வெளியே வந்து இராஜனைப்பார்த்து நமஸ்கரித்து களிப்புடன் தன் னெஜமாட்டியின் கதவைத்தட்டி மகாராஜா வந்திருக்கிறார்கள், கபாடந்திறங்களென்றுசொல்ல, தினமணியானவள் தன் தாதி வெளியே நின்று கூப்பிட்டுச்சொல்வதால் நிஜமென்று நம்பி, கதவைத் திறந்துகொண்டு வெளியே வர ராஜன் என் கண்ணே எனக்காகமனவருத்தப்படுவாயென்று யெண்ணிக் கொண்டிருந்தேன்கொஞ்சநேரத்திற்குமுன் தான் வேட்டை டையாடப்போன குமாரர்களும் வரவில்லையென்றுதோன் றிற்று. ஆ, இதென்ன அநியாயம் நானெவ்வளவோ கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கையில் யென்னை மீட்டிய நமது தாயாகிய பத்திரகாளியம்மன் அவர்கள் விஷயத்தில் சிரத்தைவைக்கவில்லையோ. நாங்கள் உங்களைவிட்ட கன்றபின் அவ்வம்ம

னைக் காணவில்லையோ? உரலுக்கு ஒருபுறமிடி மத்தளத்திற் கிருபுறமிடி என்றது போல என்னுலொருபக்கம் வருத்தப் பட்டுக்கொண்டிருக்கும் போது குமாரர்களையும் இழந்து வருத்தப்பட்டிருக்கும்படி விதித்த கடவுளுக்கு நீ யென்ன அபராதஞ் செய்தனை என்று வினவ, இராணி நீங்கள் மூவ ரும்இவ்விடம் விட்டகன்றபின் காளியம்பாள் பிரசன்னமாகி இன்னு மிரண்டு மாசத்திற்குள் சகலரும் வந்து சேருவா ர்களென்று, சொல்லிப் போயினளென்று சொன்னுள்.

அதன் பின் வெளியே போய் தன்னுடன் வந்த மந் திரி சேனுதிபதி முதலானவர்களுக்கு படுக்கைக்கு வேண் டிய இடங்களைக் கொடுத்து படுக்கும்படி எற்பாடு செய்துவி ட்டு அரண்மனைக்குப் போனுன். அதுவரை விழித்துக் கொ ண்டிருந்த ராணியானவள் குமாரர்களைப்பற்றி வருத்த மிரு ந்தபோதிலும்நெடுநாள் தன்னை விட்டுப் பிரிந்திருந்த பத்தா வானதாலன்று சந்தோஷமாகவே இராபொழுதைப் போக் கினுர்கள். விடிந்ததும் அலந்தலைக்குத் தன் தந்தை இராத்திரி வந்திருக்கிருரென்று தெரிய, உடனே ஓடிவந்து அடிபணி ந்து, நீங்கள் எங்களை விட்டுப் பிரிந்த நாள்முதலாய்த் துக்கத் தின்மேல் துக்கமாய் வந்துகொண்டிருந்தது. நாங்கள் கன்றி ழந்தபசுவைப் போலக்கதறியே வாழ் நாளைக்கழித்துக் கொ ண்டிருந்தோம். ஆனுல் இடையில் இருகண்ணுந் தெரியாமற் போன வொருவனுக்கு மறுபடி ஒரு கண் தெரிந்தாலெவ்வ ளவு சந்தோஷமுண்டோ அவ்விதம் நாங்களும் சந்தோஷ மடைய ஏதுவுண்டாயிருக்கிறதென்று சொல்ல,இராஜன் கண் மணி உனக்கிவ்வளவு புத்தியையும் அழகையும் கொடுத்த வீசனின் செயலைப்பற்றி யோசிக்கும்போது உலகிற் பொரு ளில்லாதவனுக்குப் புத்தியையும், புத்தியில்லாதவனுக்குப் பொருளையும், நல்லவற்கு ஒரு பொல்லாததும், பொல்

லாததற்கு ஒரு நல்லதும்; துக்கத்திற்கு சுகமும், சுகத்திற்குத்துக்கமு முண்டாகிறதுபோல உனக்கு மோர் பழிச்சொல்லேற்படுத்தி விட்டாரே. அதற்காக நானிதற்கு முன்னுமிப் போதும் மிகமனவருத்த மடைகிறேனென்று சொல்லி பெண்ணை பார்த்து நீ காளியின் உதவியால் சகல விபத்துகளும் நீங்கி தீர்க்காயுளாயும் புத்திரசம்பத்துடனும் வாழ்வாயென்று ஆசிர் வதிக்க விடைபெற்றுத் தன்னறைக் கேகினள்.

பின்பு காலையில் ராஜன் தந்தசுத்தி செய்து காப்பிமுதலானது சாப்பிட்டு விட்டு மந்திரி சேனாதிபதி முதலானவர்களைக்கண்டு பேசப்போனார். உடனே தன் கூடவந்த மந்திரியைக் கண்டு, தாம் ஊருக்கு எப்பொழுது பிரயாணம் வைத்திருக்கிறீரென்று வினவ, அதற்கு அம்மந்திரி தங்கள் ஆக்ஞையை எதிர்பார்க்கிறேனென்று சொன்னான். அப்படியானால் நீரின்றே தம்முடைய ஊருக்குப் போகலாமென்று ஒரத்னாரமும் நல்ல சிவிகையொன்றும் பரிசளித்து வழியனுப்பிவிட்டு தனக்குக் கிடைத்த சேனைக்கும் சேனாதிபதிக்குந் தகுந்த விடங்கள் திட்டஞ்செய்து கொடுத்து ஆகாராதிகளுக்கு வேண்டிய ஏற்பாடு பண்ணிவிட்டு அரண்மனைசேகி ஸ்நானம் பூஜை முதலானவைகளை முடித்துப்போஜனமருந்தி கொலுமண்டபம் வந்து மந்திரி பிரதானி முதலானவர்களுடனிருந்து அடியில் வருமாறு யோசிக்கலானார்கள்.

அ. மந்திரி பிரதானிகளே யுத்தத்திற்குப் போனபின் இராஜ்ய நிர்வாக மெப்படி நடந்துவந்தது.

ம. அரசே உங்கள் பாதாரவிந்தத்தை சிரமேல் வகித்துக்கொண்டு தாங்கள் நடத்திவந்ததை அநுசரித்தே இதுவரை நடத்திவந்தோம்.

அ. நல்லது என் குமாரர்களிருவரும் வேட்டைக்குப் போய்த் திரும்பி வராததைப்பற்றி யென்ன செய்தீர்கள்.

ம. நகர்களுக்கெல்லாம் ஓலையனுப்பியது மல்லாமல் அவர்களைக் கூட்டிவந்து சேர்ப்பிப்போருக்கும் பரிசளிப்ப தாய் பறைசாத்தி அநேக வேவுக்காரர் வேட்டைக்காரர் முத லானவர்களை காடுகளுக் கனுப்பித்தேடியும் பார்க்கப்பட் டது.

அ. இனி யென்ன செய்யலாமென்று யோசிக்கிறீர்கள்.

ம. நாமென்ன செய்தாலுங் கடவுள் கிருபையும் வேண்டுமல்லவா? இல்லா விட்டால் நாம் செய்வதுங் கைகூ டாது. ஆகையால் நமது ராணியிடத்தில் நம்மூர்ப் பத்திர காளியானவள் இன்னமிரண்டு மாசத்திற்குட் சகலரும் வந்து சேருவார்களென்று சொல்லிப்போ யிப்போது ஒரு மாச மாகிறது. தாங்களும் வந்து சேர்ந்தீர்கள் அதுபோல அவர் களும் வந்து சேருவார்களென்பது திண்ணம். அதற்காக நாமவளை எப்பொழுதுஞ் சிந்தனை செய்துகொண்டே யிருக் கவேண்டியது.

அ. நான் இனி என் குமாரர்களிருவரையும் கண்டபின்பு தான் இக்கொலுமண்டபம் வருவேனே தவிர அதற்கிடை யில் வருகிறதில்லை யென்று சொல்லி கொலுமண்டபம் விட்டு அரண்மனைக்குள் ளேகினர்.

பின்பு சற்று படுத்து நித்திரை செய்யவேண்டுமென்று தன் படுக்கையறைக்குச் சென்றனர், அங்கு தன் பத்னி அழுதுகொண்டு படுத்திருந்ததைக் காண திடீரென்று இவ ருக்குந் துக்கமுண்டாகி சற்று கிலேசமுற்றுப் பின் அரசன் தன் பத்னிக்குத் தைரியம் கூறி தான் கொலுமண்டபத் திற் சொல்லி வந்த சங்கதிகளைச் சொல்லலுற்றான்.

அதைக்கேட்ட அரசியானவள் அரசே, தாங்களவ்விதஞ் சொல்லி வந்திருக்கக்கூடாது. ஏனெனில் நம்தலைவிதி எவ்வா றிருக்கின்றனவோ வென்று சொன்னாள். அதைக்கேட்ட அரசன் நமக்குப் பத்ரகாளியின் கிருபை யிருப்பதால் ஒரு விதமான துன்பமும் நீடித்திருக்காது எனச் சொன்னான். இவ்விதமாக நாள்தோறும் ஒருவருக்கொருவர் தேறுதலை சொல்லிக் கொண்டிருந்தார்கள். இவ்வித மிருக்கையில் ஒரு நாள் பத்ரகாளி கோவிலுக்கு அரசன் அரசி அலந்தலை மூவர்களும் போனார்கள் அப்பொழுது புதிதாக ஓர் சன்னி யாசி இருக்கக்கண்டு பூசாரி யிடத்தில் அவரைப் பற்றிவிசா ரிக்கலாயினர். ஆனால் சந்நியாசிக்கு இவர்கள் நமது தாய் தந்தை தங்கை யெனத் தெரிந்தது. ஆயினும் அம்மனுத் தர வின்றி நாமொன்றுஞ் செய்யப்படா தென்று யோசித்துக் கொண்டு சும்மா விருந்து விட்டான். அவர்கள் பூஜாரியைக கேட்டதற்கு அவன் இவர் யாரோதெரியாது. என்னை இவரு க்கு ஆகாரங் கொடுத்து வரும்படி அம்மாளுத்தரவா யிருக் கிற தென்று சொன்னான். ஆனால் அவன் வேஷமாறி யிருப் பதனுல் இவர்களாலவனை இன்னனென்று கண்டுபிடிக்க முடியாமற் போயிற்று. அரசன் நான் அவரிடத்திற் பேசிப் பார்க்கிறேனென்று அருகிற்போக அது கண்ட அவன் அம்மனருகிற் போய் நின்றுகொண்டான். இவரும் பின் னுற் போனார். அதுவறிந்த காளியானவள் பிரசன்னமாகி நீங்கள் இவரைப்பற்றி கவனிக்கக்கூடாது. இவரைத்தான் உங்கள் துன்பங்களை மாற்றுகிறதற்காக ஏற்படுத்தி வைத் திருக்கிறேனென்று சொல்ல, அப்படியே நல்லதென்று சொல்லி சும்மாயிருந்து தங்கள் காரியத்தை முடித்துக் கொண்டு வீடுவந்து சேர்ந்தார்கள்.

அதன்பின் பத்ரகாளி கனிஷ்டனைப்பற்றி யோசிக்கலா னாள். அவனகப் பட்டிருக்கு ராக்ஷஸரிஷியைப் பற்றிக் கவ

னிக் கையில் அவன் ஒரு மந்திரவாதி யென்றும் இலேசிற் ஜெயிக்க முடியாதென்றும் யோசித்து, அவன் மர்மங்களை யறிந்து கொல்லவேண்டு மென்று எண்ணி ஒருசிறுபெண் வடிவு கொண்டு அவ்விராக்ஷஸன் மனைவியண்டை போய்ச் சேர்ந்தாள். அவள் இவளைக்கண்டு நல்ல அழகாயிருப்பது பற்றித்தனக்குத் தோழியாக ஏற்படுத்திக் கொண்டாள். இராக்ஷஸனுக்கு இப்பெண்ணிருப்பது தெரியா மலிருந் தாற் பின்னால சங்கடநேரிடு மென்று அவனிடத்திலும் நான் ஒரு பெண் வேலைக்கு வேண்டுமென்று தாயிடத்திற் சொல்லியிருந்தேன். அதற்காக எனக்கு ஒரு பெண் அனு ப்பியிருக்கிறார்களென்று சொல்லினள். அப்படியானால் நல் லது அவசியம் வேண்டியதுதானென்று சொல்லியதைப் பற்றிக் கவனியாமலிருந்துவிட்டான். இரண்டு நாள் கழிந்த பின் சிறு பெண்ணான காளி ராக்ஷஸரிஷியின் பத்னி இடத் தில் பலவாறாகப் பேசிக் கொண்டிருக்கும்போது உங்கள் பர்த்தாவானவர் தினந்தோறும் குளத்தின் மத்தியில் தவஞ் செய்கிறாரே அதன் தாத்பரியமென்னவென்று வினவ, அவ் விராக்ஷஸி அப்படி அவர் ஒருநாள் செய்யத் தவறுவாரா னால் அவருயிருக்கு ஹானி நேரிடுமென்று சொன்னாள். ஏனென்று கேட்க அவர் கொஞ்ச நாள் தவசு செய்து ஒரு தாமரை புஷ்பத்தினுள் சிறுவண்டு ஒன்றை வைத்து அப் பூவைக் குளத்தின் மத்தியில் வைத்து உண்டாக்கி அப்பூவி ற்கு ஹானி நேரிடாமலும் அதனுள்ளிருக்குஞ் சிறு வண்டி ற்கு ஆகாரமுண்டாகும்படியாயுந் தினந்தோறும் தவறாமல் ஜெபஞ் செய்து வருகிறாரென்று சொன்னாள். அது கேட்ட பத்திரகாளி அதற்கு வேண்டிய பிரயத்தனஞ் செய்யக் கருதி ஒருநாள் ராக்ஷஸன் சாயந்திரம் வீடு வந்ததின்பின் குளக்கரைக்குப் போய் அப்பூவிருக்கு மிடத்தைப் பார்த்து வந்தாள்.

இதிற்கதை வாசிப்போர்கள் பத்திரகாளியானவள் அவ்விராக்ஷஸனைவிடத்தாழ்ந்த சக்தியுடையவளா? அவனைப்பற்றிய விஷயங்களையெல்லாம் தானே ஏன் அறிந்துகொள்ளக் கூடாதென்று கேட்கலாம். ஆனாலவன் வரப்பிரசாதம் பெற்று வந்திருக்கு மர்மமெல்லாந் தனக்குத் தெரிந்தாலும் அவனுக்குக் கெடுதி உண்டாகக்கூடிய மர்மத்தைப் பிரத்தியாராலேயே கேட்டுச் செய்ய வேண்டு மென்றவ்விதஞ் செய்யும்படி நேரிட்டது. அதற்குப்பின் காளியானவள் மறுநாள் ராக்ஷஸன் வீடுவந்து சேர்ந்த பிறகு குளத்திற்குப் போய் தன்சக்தி யால் ஓர்பாலமுண்டாக்கி அப்பூவண்டை யணுகி அதைப்பிடிக்க அது கைக்குளடங்காத தண்டை யுடையதாயிருந்தது. அதுகண்டவள் கையிலிருந்த மந்திரவாளால் தண்டைவெட்டிபூவைப் பிரித்துவண்டைப் பிடித்து தரையில்வைத்து காலால் நசுக்கி விட்டு ராக்ஷஸன் வீடுவந்து சேர்ந்தாள். அதற்குள் அவன் படுத்த படுக்கையை விட்டு எழுந்திருக்கமுடியாத சீக்காய் போய்விட்டான். கொஞ்சநேரத்திற்கெல்லாம் அவன் மனைவி வந்து எழுப்ப பேசக்கூட நாவெழாமல் நானினிப் பிழைக்க மாட்டேனென்று கைச்சாடை காட்டினான். அதைக்கண்டவள் கோவென்றலர தாதியாகிய காளி, அம்மா ஏதுக்கு விசனப்படுகிறாய் எல்லாம் வல்லவனாகிய கடவுள் கிருபையல்லவோ, அதற்காக நாமென்ன விசனப்பட்டாலும் வரும்வினை வந்தே தீரும் ஆகையால் அம்மா நீ யொன்றுக்கு மஞ்சவேண்டாமென்று சொல்லினள். அவளுக்கெவ்வளவு இவள் சொன்னபோதிலு மவள் துக்கம் பெருகிக்கொண்டுவந்தது. இவ்விதமிருக்க ராக்ஷஸனுயிர் விடியுமுன் எமலோகம் புகுந்தன. பின்பு பத்திரகாளி உடனே அவ்விடம் விட்டு ராக்ஷஸனாற்கட்டப் பட்டிருக்கும் கட்டிடத்திற்கு வந்து தன் சுய ரூபங்

கொண்டு ராஜன் மகனன்டைபோய் சிறுவனே எழுந்திரு உனக்கிங்கிருக்கும் சினேகிதர்களுடன் இதைவிட்டு வெளியேறி தங்கள் தங்கள் ஊர்போய்ச்சேருங்களென்று சொல்ல, ஒவ்வொருவரும் தங்களறைகளைவிட்டு மிகச்சந்தோஷத்துடன் வெளியேறி காளியின் பாதாரவிந்தத்தில் விழுந்தெழுந்து கைகட்டி நின்றனர். அவர்களொவ்வொருவருக்கும் விபூதி பூசி சீக்கிரம் போங்களென்று சொல்லி கட்டிடத்தைக் கடத்தி வெளியாக்கி விட்டனள். அப்பொழுது சிறுவனைப் பார்த்து மற்றவர்களெல்லாரும் நல்லாருக்குப் பெய்பு மழையெல்லாருக்கும் பெய்புமென்று சொல்வதுபோல உம்மாலெங்களுக்கும் இனிமேலிவ் விராக்ஷஸனண்டைவந்து சிக்கப்போகிற அநேகர்களுக்கும் நன்மையுண்டாயிற்று. ஆனதால் நீரே எங்களுக்கு உயிர் கொடுத்த உண்மையான நாதனென்று அநேக விதமாய்ப்புகழ்ந்து பேசி தன் தன் நகருக்கேகினர்.

இதன்பின் இராஜகுமாரன் தன்னூர் நோக்கி வரும்போது வழியில் ஒருகிழவியைப் போல் பத்திரகாளி வருவெடுத்துவந்து வழியேபோகும் ராஜகுமாரனைப் பார்த்து ஏ, சிறுவனே எங்கிருந்து எங்கு போகிறுய் உள்ளதைச்சொல்லென்று கேட்டாள். அப்பொழுது சிறுவன் நான் வினேத புரியையாளும் திசில ராஜனுடைய இளைய குமாரன். வேட்டைக்கு வந்த விடத்தில் ஒரு ராக்ஷஸன் மாய்கையிலகப்பட்டு சிக்குண்டிருக்கும் போது என் தேசத்திலுள்ள பத்திரகாளி யம்மனல் விடுவிக்கப் பட்டு என் தேசத்திற்குப் போகிறேனென்று சொல்வதைக் கேட்ட அக்கிழவியானவள் மனதிற்குட் சந்தோஷப்பட்டு நல்லது நான் யாரென்று தெரியுமா? நீ சொன்ன பத்திரகாளியாலனுப்பட்டவள். அவளுன்னை நேராக தன் கோவிலு

க்கே கூட்டி வரும்படி ஆக்ஞாபித் திருக்கின்றனள். அதன்படி இருவரும் கோவிலுக்குப் போகவேண்டுமென்று, காளியினாலயத்திற்கே கூட்டிப் போயினள். உடனே சிறுவன் கோவிலை வலம் வந்து, நமஸ்கரித்து, நிற்பதைக் கண்ட காளியானவள் அப்பா நீ இந்த விடத்திலேயே இருக்கவேண்டும். இதோ இருக்கிற ரிஷிதான் உன் தமயனார் இவருமொரு ராக்ஷஸன் வசமகப்பட்டு தப்பித்து வந்திருக்கிறார். உங்களிருவரையு மின்ன ஒருவாரத்திற்குள் உங்கள் தாய் தந்தையிடம் சேர்ப்பிக்கிறேன். அதுவரை இந்தவிடம் விட்டுப் போகக்கூடாதென்று சொல்லிவிட்டுப் பூஜாரியை இருவருக்குமாகாரங் கொடுக்கும்படி திட்டஞ் செய்து விட்டாள்.

இப்படியி ிருக்கையிலிரண்டு மூன்றுநாள் கழித்து பத்திரகாளி கிசில ராஜனுக்குப் பிரசன்னமாகி நாளைய வெள்ளிக்கிழமை உன் குமாரர்களிருவரு முன்னிடம் வரப் போகிறார்கள். ஆனதால் நீயுன் அரண்மனை யெல்லாஞ்சோடித்து சகல ஜனங்களையும் பத்து நாழிகைக்கெல்லாம் தயாராய் வந்து கூடியிருக்கும்படி ஏற்பாடு செய்யென்று சொல்லி மறைந்து போயினள். வெள்ளிக்கிழமை காலையில் பத்திரகாளி பூஜாரியிடத்தில் ஒரு பரிகாரியைக் கூட்டிவந்து, இருவருக்கும்வபனம் பண்ணிவைக்கச் சொன்னாள். அவ்விதஞ் செய்து வித்தான். பின்பு 10-நாழிகைக்கெல்லாம் பத்திரகாளி யொரு விருத்தாப்பிய பிராமணஸ்திரி வடிவங்கொண்டு அரசனரண்மனைக்கு வரும்போது சிரேஷ்டனை கிளிரூபமெடுக்கச்சொல்லித் தன் கையில் விட்டுக்கொண்டு வந்து சேர்ந்தனள். அப்பொழுது அப்பந்தலி லிருந்தவர்களும் இராஜனு மிராணியும் அலந்தலையும் அதிக மனமகிழ்ந்தார்களென்றபோதிலும் மூத்த ராஜகுமாரனைக்காணாத வருத்தமு

ள்ளுக்குளிருந்தது. இதற்குள்கிழவியும்இளையகுமாரனும் பந்தலுக்குநடுவே வந்து நின்று சகல ஜனங்களையு முட்காரும்படிசொல்ல, அவ்விதமாக சகலரும் அவரவருட்காருமாசனத்திலமர்ந்தனர். பின்பு கிழவியாகிய பத்திரகாளி தன் கையிலிருக்குங் கிளியைப்பார்த்து,

ப. உனக்கெந்தவூர்
கி. வினோதபுரி
ப. நீ யார்
கி. நானிவ்வூர் ராஜாவின் சிரேஷ்ட குமாரன்
ப. நீ இவ்விதமிருக்கக் காரணமேன்
கி. இது நான் கற்ற வித்தையின் பிரதாபம்
ப. அப்படியானாலுன் சுயரூபத்தைக் காட்டு
கி. இதோபாருங்க ளென் சுயரூப்பம்

என்று தன் ரூபமெடுக்கக்கண்ட சகலரும் அப்பிராமணஸ்திரீயாகிய காளியம்மனை வந்தனஞ் செய்யக்கண்டு களித்து பின்பு காளியும் தன் சுயரூபத்துடன் சகலருக்குந் தெரிசனங்கொடுத்து நீங்கள் பட்டதுன்பங்களை யெல்லாம் இவர்களுக் கறிவியுங்களென்று இராஜகுமாரருக்குச்சொல்லிவிட்டு மறைந்துபோயினள். அம்மனுத்திரவுப்படி இருவருந் தங்கள் தங்கள் விருத்தாந்தங்களை யொன்று விடாமற் சொன்னதன் பின் இராஜனவர் ஜனங்களைப்பார்த்து ஒ ஜனங்களே இதுவரைக் காணமற்போயிருந்த என்மக்களிருவரு மின்று காளியினுதவியால் வந்து சேர்ந்தபடியால் இன்று ராத்திரி நம்மூர் வடக்கெல்லையிலிருக்கும் அம்மனுக்கு சிறந்த ஓர் பூஜைசெய்யப் போகிறபடியால் சகலரு மவட்ம்வந்து பார்த்து அருளைப்பெற்று ஆனந்தமடைய வேண்டியதென்று சொல்லி பழம், ஜீனி தாம்பூல முதலானதுகள் கொடுத்தனுப்பினர். அந்தக்ஷணமே பத்திரகாளி கோவிலிற் பந்தற்

போட்டு லஸ்தர் குளோபுகள் தூக்கி, வாழை முதலான தோரணங்கள் கட்டி சிங்காரித்து அபிஷேகம் நைவேத்திய முதலானவைகளெல்லாம் தயார் செய்யும்படி மந்திரிக்கு ஆக்ஞாபித்தனன். மந்திரி மாலை 6-மணிக்குள் தயார் செய்து விட்டான். 7-மணிக்கு இராஜா, இராணி, குமாரர்களிருவர் அலந்தலை மற்றுமான அரண்மனைவேலைக்காரர்கள் பூராவுங் கோவிலுக்குப்போய்ச்சேர்ந்தார்கள். இப்படியே ஊர் ஜனங் களுமொவ்வொருவராய் வந்து வெகு ஜனங்கள் கூடவே 7½ மணிக்கெல்லாம் அபிஷேகத்திற்காரம்பித்து, நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது அலந்தலையென்னு மரசன் குமாரியானவள் நன்றாய் வாசித்தவளானதால் அங்கிருக்கும் போதே பத்திரகாளியின் பேரில் ஸ்தோத்திரமாக அடியில் வருமாறு பாடினாள்.

இராகம். இந்துஸ்தானி

(அப்ஸோஸ் கைஸாஜமானாரே ஜோகி என்றமெட்டு.)

கண்ணிகள்

1. அகில புவனங்கட்கும் ஆதிசத்திநீயே
சுகிர்த குணமுள்ள சூலிகாப்பாயே.

2. பொல்லா வசுரருடன் போர்புரிந்ததாயே.
நல்லவர முனிவர் சாபந்தீர்த்ததாயே.

4. சங்கரன் தேவி சடாக்ஷரிநீயே.
மங்கள குணாகர மகேஸ்வரிநீயே.

4. அருமையாக அருந்தபசு செய்துநீயே
பெருமையாயிடப் பாகம் பெற்றதாய்நீயே.

5. தக்கன்குமாரி ஜெயவீர சத்தியே
இக்கணமிடர்தீர்த் தருள்பாலித் தாயே.

6. மும்மலங்களை வெல்லும் முக்கண்ணிநீயே.
சிம்மவாகன சேவை தந்தருள்வாயே.

7. அடைக்கல மெனவந்த அன்பர்களை நீயே
கடைக்கண் பார்த்தருள்செய்த கௌரி சுந்தரியே.
8. குற்றங்கோடி யாகிலுங்குண மொன்றை நாடியே
முற்றுங்காத்து ரக்ஷிக்க முன்னிற்பாய் நீயே.

அதுவுந்தவிர பந்தலின் வெளிப்பக்கத்தில் உள்ள ஜனங்கள் ஒரு பக்கம் வில்லடியும், மற்றொருபக்கம் கொம்பு, தப்ட்டை, உருமி, முதலானதுகளடிக்கிறதுமாக ஏகதடபுடலாயிருந்தது. இன்னு மரண் மனையிலுள்ள தாதிப் பெண்களெல்லோருங் கூடிப்பாடிக் கொம்மியடித்தனர்.

இவ்விதம் காளிதேவிக்கு பூஜை முதலானவைகளை முடித்து விட்டு வீடுவந்து சுகமாயிருந்தார்கள். அப்பொழுதொருநாள்தினமணி தன் மகளைப்பற்றி விசாரப்பட்டு ராஜனிடஞ்சொல்ல அவர் நாமெல்லாரும்போய் அவளை மீட்டி வைத்து வருவோமென்றுசொல்லி தன் தேசத்தை மந்திரி வசம் ஒப்புவித்து ஒரு நல்லநாட் பார்த்து மனைவிமக்களோடு அங்கதேசம் பிரயாணமானார். இரண்டாம் நாளில் அவிடம்போய்ச் சேர்ந்தார்கள். அதுகண்ட சிருங்கராஜன் தன் மாமனாராகிய விநோத புரி அரசனைவரவேற்று அவர்களுக் குண்டான இடர்களால் வருத்த மடைந்ததையும் அது தீர்ந்த விதத்தையும் கேட்டுத் துக்கித்தும், ஆச்சரிய மடைந்தும் பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது மைத்துனன்மார்களும், அலந்தலையும் பக்கவறையில் நின்றார்கள். சமயம் பார்த்து விநோதபுரி அரசன் அவர்களை சிருங்கராஜன் முன்னழைத்து தன் குமாரியின் பிழையைப் பொறுத்து அரண்மனையிற் சேர்த்துக் கொள்ளச் சொல்லிக் கொண்டிருந்தார். அச்சமயம் யாதுகாரணமாகவோ தனபாலனும் ஞானமிர்தமும் அவடம் வந்தார்கள், இவர்களைக் கண்ட சிருங்கராஜனாகிய தகப்பன் தன

பாலா உன் பாட்டனர் சொல்வதைக் கேளென்று சொல்லவும் உடனே பாட்டனர் அவனிடம் சொன்னர். அதற்கவன் சின்ன ராணியை அரண்மனைக்குள் விட்டால் எவ்விதத்திலும் ஞானமிர்தத்திற்குக் கெடுதிவிளையும். ஆனதால் அது பிசகானகாரியம். வெளியே தானிருக்க வேண்டு மென்றான். அதைக் கேட்டுக் கொண்டிருந்த ஞானமிர்தம் ஒரு தரம் புத்திதவறி விட்டால் அதைக் காயப்படுத்தி எப்பொழுதுமப்படிச் செய்வார்களென்று நினைக்கப்படாது. ஆனதால் அவர்களை இன்றுமுதல் அரண்மனைக்குள் ளனுப்புவதே உத்தமம். வேறு யோசனை யொன்றும் செய்யக்கூடாது என்று சொன்னன். இவ்விரண்டுபேர் சொன்னதையுங் கேட்டு மந்திரியுடன் ஆலோசித்துக் கடைசியாய் அலந்தலையை அரண்மனைக்குள்ளனுப்பினர்கள். இதன் பின் இரண்டுவார மிருந்து விநோதபுரி அரசன் தன் மனைவி மக்களோடு தன்னூருக்குப் பிரயாணப்பட்டுப் போயினன்.

இவ்வாறிருக்கையில் அலந்தலை மூத்தாள் மகனல் தனக்கு முன் நேர்ந்த சங்கடத்தை மறவாதவளாய் சமயம் பார்த்து கெடுதி செய்ய நினைத்துக் கொண்டிருக்கையில் ஞானமிர்தம் குற்றமற்றவனயிருப்பது பற்றி, அவள் தன் தாதிகளி லொருத்தியை நேற்று இராத்திரி அவளிருக்கும் அறைக்குட்போய்ப் பலவந்தம் பண்ணினதாகவும் அதற்கவள் சம்மதியாமல் தன்னிடம் வந்து சொன்னதாகவும் தோழியுமவளும் உற்பத்தி பண்ணிக்கொண்டு இராஜனுக்குத் தெரிவிக்க அரசன் மந்திரியிடஞ்சொல்ல, அதற்கு மந்திரி நம்முடைய இளவரசானவர் அவ்விதஞ்செய்திருக்க மாட்டார். இது ஏதோ கபடமானபழிசுமத்தலே தவிரவேறொன்றுமில்லை. ஆனதால் திரவிசாரிக்க வேண்டும் என்று சொல்லிவிட்டான். அதன் பேரில் ஞானமிர்தத்தையும் தோழியையும்

வருத்தி ரகஸ்ய விசாரணைசெய்ததில் அலங்கலேயின் போதனையின் பேரில் தோழியானவள் ஒரேசாதனையால்த் தன்னை இளவரசர் பல வந்தப்படுத்தினர் நானதற்குச் சம்மதியாமல் தன்னெஜமானியாகிய சின்ன ராணியிடந் தெரியப்படுத்தினேனென்று சாதித்தாள். ஞானமிர்தமோ ஒன்றுந் தோன்றாதவனாய்.

கந்தபுராணம்.

" ஆக்கமும் வருமைதானுமல்லலு மகிழ்வுமெல்லா
நீக்க மில்லுயிர் கட்கென்று நிலையெனல் கொள்ளப்பாற்றே
மேக்குயர் கடவுட்டிங்கள் வெண்ணிலாக்கதிரின் கற்றை
போக்கோடு வரவு நாளுமுறை முறை பொருந்திற்றன்றே"

பட்டணத்தார்.

" அழுதாற் பயனென்ன நொந்தாற்பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னையொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோ
னெழுதாற்படி வருமோசலியா திருவென்னேழை நெஞ்சே"

என்று நினைத்து நான் ஒரு பிழையுஞ் செய்யாதபரிசுத்தவான். என்னைத் தங்களுக்குத் தோன்றுகிறபடி செய்வதில் யாதொரு ஆக்ஷேபனையுங் கிடையாதென்று சொல்லி சும்மாவிருந்து விட்டான். அதைக்கேட்டுக் கொண்டிருந்த தோழியானவள்.

வேமன்னகவி.

" மன்னனொருமற் கடமேன் மந்திரிமார் பன்றிகளாம்
பன்னும் படைத்தலைவன் பக்கியெனுல்—துன்னமொரு
சேவகருமா நிறையாட் டிண்களிறும் வாசியும்
தாவுமெலி பூனையுமாம் சார்ந்து."

நீங்கள் இவ்விஷயத்திற் சும்மாவிருந்து விட்டால் "யதாராஜா ததாப்ராஜா" என்பதைப்போல ஒவ்வொருவரும்

நடக்க ஆரம்பிப்பார்கள். அதனால் நம்முடைய தேசமானது சுகமாய் வாழ முடியாதென்று சொல்லி முடித்தனள்.

இதெல்லாங் கேட்டுக் கொண்டிருந்த அரசனும் மந்திரியும் ஆலோசனை செய்யலுற்றனர். இவை யறிந்த இளையாள் குமாரனானவன் ஞானமிர்த மொருக்காலு மிவ்வித வேலைசெய்திருக்கவே மாட்டான். ஆனால் முன்னவனுக்கு நாவியைக் கலந்துகொடுத்த என் தாயின் திச யாலோசனையின் பேரில் தன் தாதியை எற்படுத்தி இவ்வித மவன்பேரிற் குற்றங் கொண்டுவந்திருக்கிறதே தவிர நியாயமாய் இது நடக்கவில்லை யென்பது எனக்குத் திண்ணமா யிருக்கிறதென்று சொன்னான். அதற்கு அரசன் அப்பா நீ சொல்வது வாஸ்தவம். உலகோர்க்கு நாம் ஒப்பக்கூடியதாய் நடக்கவேண்டுமே யல்லாது நாம் நினைத்தபடி நமக்கென்று ஒருவழி நடப்பது சரியாகமாட்டாது. ஆனபடியால் அதற்கு ஒரு எற்பாடு அவசியஞ் செய்யவேண்டியதாய்த் தான் எற்பட்டிருக்கிறது என்று சொன்னார். அதற்குச் சிறுவன் அவன் குற்றமற்றவன் அவனைச் சிக்ஷிப்பது விதியாகாது. ஆயினும் நானிதை நாளடவில் வெளியாக்குகிறேன். இப்பொழுது உங்கள்சித்தமென்று சொல்லிவிட்டுத் தன்இருப்பிடஞ் செல்லலுற்றனன். அதன்பின் அரசனும் மந்திரியுமாக ஆலோசனை செய்து ஞானமிர்தத்தைத்தேசப்பிரஷ்டஞ்செய்யத் தீர்மானித்துக் காவற்காரர்களைக் கூப்பிட்டு இவ்வரச குமாரனை நம் நாடுகடத்தி விட்டு வாருங்களென்று ஆக்ஞாபித்தனர். இச்சங்கதிகளை யெல்லாங் கேட்ட மூத்தாளான அவன் தாய் குய்யோ முறையோவென்று அலறிக்கொண்டு தன் மகன்ண்டை வரச் சிறுவனாகிய ஞானமிர்தம் தன் தாயைப்பார்த்து,

கைவல்யம்

" பஞ்சினை வூழித்தீப் போற் பலஜெனமவீ வித வித்தாம்
சஞ்சித மெல்லாம் ஞானத்தழல் சுட்டு வெண்ணீராக்கும்
கிஞ்சிலா காமியந்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
மிஞ்சினபிராரத்தவத்தின் வினையனுப வித்தே தீரும்"

தவிரவும்;

வேமன்னகவி

" மெலிவுற்ற வேளையினில் வெம்மடங்கரானலும்
வலியற்ற நாயால் வருந்தும்—நலிவுற்ற
காலத்து நாங்தொடங்குங் கன்மங்களொன்றேனும்
ஞாலத்திலே முடியா நன்கு"

ஆனது பற்றித்தாயே நீ விசாரப் படுவதிற் பிரயோசனமில்லை. பொதுவாய் உலகில் நன்மை விதைத்தால் நன்மை விளையுமென்ற ஆன்றோர் வாக்குப்பொய்த்துப்போகுமா? கடவுளொருவரிருந்து சகலவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கிறாரல்லவா? நான் குற்றமற்றவனுயிருந்தால் கூடியசீக்கிரம் நல்ல பதவியிலிருப்பேன். இல்லாவிட்டால் சீக்கிரமாகக் கெட்டுப்போவேன். ஆனதால் நீ சீக்கிரம் விடைகொடுத்தனுப்புவாயென்று சொல்ல, நல்லது மகனே நீ எவ்விடம் போனாலும் கடவுளுமுன்னுடனிருந்து நன்மைசெய்வார். போய்வா மகனே யென்று வழியனுப்பி விட்டு தன்னரண்மனை வந்து துக்கத்துடனிருந்தாள்.

பின்பு ஞானமிர்தம் தன் குருவாகிய சுந்தரரிடஞ் சொல்லிக் கொள்ளும்படி சென்றனன். இதற்குள்ளவர்க்கு இச் சங்கதி யெல்லாந் தெரிந்து இவனைக் கண்டதும் பேசக்கூட நாவெழாமல் சும்மாவிருந்தார். ஞானமிர்தம் சுந்தரரைப்போய் கண்டு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அரண்மனையில் நடந்ததாகச் சொன்ன வற்றையும் அதற்கு ராஜா

வாற்செய்த பரிகாரத்தையும் விபரமாகச் சொல்லக் கேட்ட வுடன் சுந்தரர் ஹரி! ஹரி!! என்று காதைக்கையால் மூடிக் கொண்டு இதென்ன வநியாய மநியாயமென்று சொல்லி எழுந்திருந்து ஞானமிர்தத்தைக் கையிற் பிடித்த வண்ண மாகவே அரசன் சமுகத்திற்கேகினர். சுந்தரரைக்கண்ட அரசன் உடனே எழுந்து வணங்கி ஆசனத்திலிருத்தித் தானுந் தன்னாசனத்தி லுட்கார்ந்தார். சுந்தரர் அரசே நீரெ ன்ன இவ்வித அநியாயச் செய்கையைச் செய்து விட்டீர். இதனால் உம்முடைய தேசத்தில் நல்ல மழை பெய்யுமா? நாடு செழித்திருக்குமா? குற்றமற்ற குண சீலனுக்கு இடர் விளைத்தது நீதிக் குறைவேயன்றி வேறொன்றுமில்லை. இது நிற்க? நான் முன்னமே மறுவிவாகத்திற்காக பெண்பேச விநோதபுரிக்கு ஆளனுப்பி யிருக்கிறேனென்று சொன்ன வுடன் பெரு மூச்சு விட்டு சும்மாயிருக்க, ஏனிப்படிப் பெரு மூச்சு விட்டுப் பேசா திருக்கிறீரென்று கேட்டதற்குப் பின்னாற் சொல்லுகிறேனென்றேனே? மறுமணத்தின் விசே ஷத்தினருமையின் பலன் என்னமாய் முடிந்தது பார்த்தீரா? கடுகளவு கூட களங்கமற்ற கண்ணாளனை மூத்தாள் மகனை நாடு கடத்தும்படி ஏற்பட்டுவிட்டது. இன்னும் நீரென் னென்ன மனக்கஷ்டமடையப் போகிறீர் பாரும். என்று லும் இவனை அவ்விதம் நாடு கடத்துவது சரியில்லை. தவி ரவும் நீர் உமக்குப்பிறந்த குழந்தையைக் கைவிடுதல் சரி யன்று. உலகில் சந்தனம், குளிர்ந்த ஜலம், ஸ்திரிகள் முத லிய வஸ்துக்களின் ஸ்பரிசத்தினால் சுகமுண்டாகிறது. இதனை விட புத்திரனானவன் தன்னைக் கட்டி தழுவுவதினா லுண்டாகும் சுகமானது மேலான தல்லவா? இன்னும் நரர்களிற் சிரேஷ்டமான பிராமணனிலும், மிருகங்களிற் சிரேஷ்டமான பசுவிலும், ஸ்பரிசசுகததை யளிப்பவை களில் சிரேஷ்டம் புத்திரனென்பதை நன்றாயறியக் கடவாய்.

இன்னும் சிசுக்களுக்கு சம்புரோக்ஷணை செய்யும்போது ஏ புத்ரா! நீ என் தேகத்தின்றும் என் ஹிரதயத்தினின்றும் ஜெனித்திருக்கின்றாய். என் ஜீவன் உன்னைச் சார்ந்திருக்கின்றது. என் வம்சமும் உன்னால் வீர்த்தியாக வேண்டும். ஆதலால் நீ நூறுவருடம் சுகமாய் வாழக்கடவாய். என்று சொல்லுகிறார்கள். அது போல நீயொருவனே இப்பொழுது இருவராய்த் தோற்றுகின்றாய், கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பம்போல புத்திரனிடத்து உன்னை நீ பார்த்துக்கொள்கிறாய், என்று பலவிதமான நீதிகளை சொன்னார். இதெல்லாவற்றையுங் காது கொடுத்துக் கேட்டுதுக்கொண்டிருந்த அரசன் சுவாமி தாங்கள் சொன்னது சரியே. ஆயினும் நமது செயலாலொன்றும் நடக்கிறதில்லை என்றும் "எல்லாமவன் செயலென்றும" தாங்கள் முன்னெனக்குச் சொல்லியதுபோல் அவனருளால் நடக்குஞ்செயலை நம்மால் நிறுத்தமுடியுமா? தவிரவும் ராஜாக்கினை ஏற்பட்ட பிறகு மாற்றுவதும் பிசகாயிருப்பது பற்றி சுவாமியவர்கள் மன்னிக்கும்படிகேட்டுக்கொள்ளுகிறேனென்று சொல்லி முடித்தனன். நல்லது போகிறேன் இன்னுமிரண்டு மூன்று வருஷத்திற்குள் தானயறிந்து கொள்வீரென்று சொல்லி ஞானமிர்தத்தையுந் தன்னுடன் கூட்டி இருப்பிடம், வந்து சேர்ந்து ஞானமிர்தத்தைப் பார்த்து உனக்கு இதைவிட இன்னும் பெருங்கஷ்டம் வரினும் உன்குணமாத்திரம் மாறாதிருக்க வேண்டுமேதவிர வேறொன்றுஞ் செய்யவேண்டியதில்லை யென்றும், இன்னுமநேக விதமான நற்புத்திகளைச்சொல்லி யனுப்பிவிட்டு துக்கமாயிருக்கும் அவன் தாயிடஞ் சென்று இரண்டு மூன்று வருஷத்திற்குள் "துன்பம் போலவருமின்பம் இன்பம்போல வருந்துன்பம்" என்பதைப் போல நம்முடைய ஞானமிர்தம் சக்ராதிபதியாகியாவரும் புகழும்படி அரசாளுவான். நீ யொன்றுக்குமஞ்சாதிரு என்று சொல்

லிப் போயினர். சுந்தரராலனுப்பப் பட்டஞானமிர்தம் இளை யாள் குமாரனையழைப்பித்து அவனுக்கு வேண்டிய புத்தி மதிகளைச் சொல்லித் தன் பிதாவுக்குப் பின்ராஜரீகத்தை ஒழுங்காய் நீதி குன்றுமல் நடத்தி நற்பெயரெடுத்து நல்ல கதியிற் சேரும் விருப்பத்துடன் அரசாளுவா யென்று வாழ்த்தி தன் விசாரம் வைக்கவேண்டா மென்றுஞ் சொன் ஞன். அது கேட்டவன் அநீதிகொண்டு அரசாளும் இராஜ னுடைய இராஜ்யத்தை நான் அரசாள மாட்டேன். எனக் கும் வேண்டியதில்லை. உன்னுடன் நானுங் கூட வருகிறே னென, அதற்கு ஞானமிர்தம் நீ அப்படிச் சொல்வது தப்பானகாரியம், இவ்விடமேயிருந்து இளவரசு பெற்று அர சனுக்குப் பின் அரசாண்டு வருவதே சிலாக்கிய மென்று போதித்து நிறுத்திவிட்டு வடமுகம் நோக்கிச் சென்றனன். அப்படிப்போகும் போது இவ்வுலகின்கண் மானிடர்களின் கர்மங்களே அவர்களுக்கு மேலான காரணங்களா யிருப் பதினுல் கற்பில்லாமாதர்களின் அழகைப்போலவும், ஈரமில் லார் மகிழ்ச்சியைப்போலவும, ஊழின்வலி இவ்வுலகியற்கை யாயுமிருக்கின்றன. ஆனதாலிச் சரீரமானது முன்கர்மத்திற் குப் பயனுகவும் ஏய்வில்லாத கருமத்தை உண்டாக்குங்கருவி யாயுமிருக்கின்றது. ஆகையால் குருசொற்படி எந்தக் காரண த்திஞலும் நற்குணங்கெட்டுப்போகாமலிருப்பது தான் நல்ல தென்று யோசித்து அவ்விதமே நடந்து சத்திரங்களிற் சாப்பிட்டுக்கொண்டு காலைமாலை வழிநடந்து ஸ்தலதெரிசன ங்கள் செய்துகொண்டு ஒராண்டின் கடைசியில் டில்லிமா நகர்வந்து சேர்ந்து ஓர்பொது மடத்திலிருந்தான். அப் பொழுது அவன் ரிஷீஸ்வரரைப் போலிருந்தான். இன்னும் ஆகாரமுடிந்தபின் னெப்பொழுதும் ஜெபதபங்களிலேயே த ன்காலத்தைக் கழித்து இரவிலுங்கூட ஒருஜாமந் தூங்கி எழுந் துவிடுவான். இச்செய்கைகளை யெல்லாங்கண்ட அவ்வூர்

வாசிகளிற் கற்றோர் பலர் வந்து கூடி சாஸ்திரவாராய்ச்சியில் தேர்ந்தவரென்று கண்டு ஆகாரமளித்து இவ்வூரைவிட்டுப் போகக்கூடாதென்று வேண்டிக்கொள்ள, அவ்விதம் பெரியவர் சம்மதிக்க உடனே அம்மடத்தில் சௌகரியஞ் செய்துகொடுத்து சாஸ்திரவாராய்ச்சி செய்துகொண்டு வருகிறார்கள். இதுநிற்க

முன் ஞானமிர்தத்தை வழியனுப்பிவிட்டுப்போன இளையாள் குமாரனை இராஜனும் மந்திரியும் கொலு மண்டபத்திலிருந்து அழைத்துவரச் சொல்லி உனக்கு இளவரசுப் பட்டங்கட்டுகிறதற்கு நாள் பார்க்கப்போகிறோம், அதற்கு நீயும்கூட இருக்கவேண்டுமென்று சொன்னார்கள். அப்பொழுது இளையாள் குமாரனான தனபாலன் இவ்வரிய ராஜ்யத்தின் இளவரசாயிருந்து பின் அரசாள எனக்குப் பிரியமில்லை. என்னையும் வெளியே போகச் சொன்னாலும் போய்விடுவதில் ஆக்ஷேபணையுமில்லை. ஒருபெண்பிள்ளையின் பொய்ப்பேச்சை நம்பி குற்றமற்ற ஒரு இராஜகுமாரனை நாடுகடத்தினீர்கள். இனி என்னென்ன நடக்குமோ அவைகளை என் கண்ணாற் பாராமலும், காதாற் கேளாமலும், என்னையும் அவ்விதஞ் செய்தல் நலமேதவிர எனக்கு இளவரசுப்பட்டங் கட்டவே கூடாது. நாங்களல்லவோ கட்டுகிறோம் நீ சம்மதிக்க வேண்டுமென்று சொன்னால் எனக்கு அவ்விதஞ்செய்துகொள்ளப் பிரியமுமில்லை என்று சொல்லிவிட்டான். இது எதைப்போ லிருக்கிறதென்றால் முன் பரதருக்குப் பட்டங் கட்டப்போகையில் தமையனை ஸ்ரீ ராமபிரானை காட்டுக்கனுப்பிவிட்டெனக்குப் பட்டங்கட்டிக்கொள்ளப் பிரியமில்லை என்று சொன்னதைப்போலிருக்கிறது. இதன் பின் தனபாலனை யனுப்பிவிட்டு மந்திரியும் இராஜனுமாக யோசிக்கலாயினர். அப்பொழுது மந்திரியானவன் நான் அப்பொழு

தே சொல்லவில்லையா? ஞானமிர்தம் குற்றமற்றவன் இது கபடச் செயலாயிருக்கிறது. ஆனதால் தீர ஆலோசித்துச் செய்யவேண்டுமென்றேன். தனபாலனும் அவ்விதமேசொன்னார். தாங்கள் கவனியாமல் ஆக்கினை கொடுத்துவிட்டீர்கள். அது இப்பொழுது தொந்தரவுக்கிடமா யிருக்கிறது. இனி நாம் செய்வதில் யாதொன்றுமில்லை. இதற்கு வழியென்னவென்றால் நம்முடைய இளவரசரை அது பொய்யென்று ரூபிக்கவேண்டும் இல்லாவிட்டால் இளவரசுப்பட்டங் கட்டிக்கொள்ள வேண்டுமென்று சொன்னால், அவர் சொல்வதைக் கேட்டு பின்பு அதற்கு வேண்டியபடி செய்துகொள்வோமென்றான். உடனே தனபாலனை யழைப்பித்துக் கேட்க தனபாலன் எனக்கு ஒரு மாதத்தவணை கொடுத்தால் பொய்யென்று ரூபிக்கிறேனென, அவ்விதந் தவணை கொடுத்தனுப்பிவிட்டார்கள். தனபாலன் தன்னறை வந்து படுத்துக்கொண்டு இதற்கென்ன உபாயஞ் செய்வதென்று யோசிக்கலாயினன். பலவிதமாயும் யோசித்துக் கடைசியாய் உள்விழுந்தே உண்மை யறியவேண்டுமென்று எண்ணங்கொண்டு மெதுவாகத் தன் தாய் இருக்கும் அறைக்குப் போய் தன் தாயுடன் சிநேகமாய்ப் பேசினான், இவ்விதம் நெடுநாளாக நடந்து வந்தது. இப்படி யிருக்கையில் ஓர் நாள் திடீரென்று இராத்திரி தாயிடம்போக தாயானவள் மகனே! ஏது இப்போது இங்கு வந்தாயென? மகன் அரசர் எனக்கு இளவரசுப் பட்டங்கட்ட வேண்டுமென்கிறார். அது எனக்குச் சம்மதியில்லை. அதைப்பற்றி உன்னிடங் கலந்து போக வேண்டுமென்று வந்தேனென்றான். அதற்குத் தாயானவள் நான் உனக்கு இப்பட்டங் கிடைக்கிறதற்காகப் பட்டபாட்டைக் கடவுளறிவார். அப்படியிருக்கத் தலையாலேவந்த சிதேவியைக் காலாலுதைத்துத் தள்ளுவதுபோற் செய்யாதே என்று சொன்னாள். அதைச் செவியுற்ற இரா

ஜகுமாரன் தாயே இப்பட்டங் கிடைக்கிறதற்காக நீ பட்ட கஷ்டங்களென்ன? அவைகளை விபரமாகச் சொல்வாயென அலந்தலே முதலில் வேட்டைக்குப் போகும்போது பக்ஷணத்தில் நஞ்சு கலந்து கொடுத்து அதற்காகத் தன்னைச் சிறை வைத்ததும் பின்னால் தன்தாய் தகப்பன் தம்பிமார் முதலானவர்கள் கூட்டிவந்து ராஜாவிடத்தில் மன்னிப்புக் கேட்டு சிறைமீட்டி வைத்ததின்பின் ஞானமிர்தத்திற்கு இளவரசுப்பட்டங் கட்டினவுடன் என்மனதிற்கு எப்படியாவது அவனை இவ்விராஜ்யத்தைவிட்டு ஓட்டிவிட வேண்டுமென்று தோன்றிற்று. அதற்காக நான் என் தோழிக்கு 5000-ரூபாய் கொடுத்து அவ்வித ஏற்பாடு செய்தேன். அதன்பேரில் அவனை நாட்டைவிட்டோட்டினார்கள். இனிமேலாவது நீ இளவரசுப் பட்டங்கட்டிச் சுகமாயிருக்காமல் வேண்டாமென்று சொன்னே னென்கிறாயே, இது சிறுபிள்ளைப்புத்தியினாற் சொல்லுகிறாய். உடனே போய் இளவரசுப்பட்டங் கட்டச் சொல்லென்று சொல்லியனுப்பினாள். கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்து வாய்த்தாப் போல தான் கருதின விஷயம் இலேசாய்த் தெரிந்துகொண்டோமென்ற சந்தோஷத்தினால் சரேலென்று மந்திரியினிடம் போய் தான் கேட்டுவந்த சகல சங்கதிகளையுஞ் சொன்னான்.

அது கேட்ட மந்திரி நல்லது நாங்கள் கூப்பிட்டனுப்பினவுடன் வந்து சேர்ந்தால் பின் நடப்பவைகளைக்கவனித்துக் கொள்வோம். நீங்கள் போங்களென்று அனுப்பிவிட்டான். நாலாம் நாள் கொலு மண்டபத்திலிருக்கும் போது ராஜன் முதல் நாள் சின்ன ராணி அரண்மனைக்குப் போய் வந்தாரென்று தெரிந்துகொண்டு திடீரென்று முன் இளவரசர் பேரில் குற்றஞ்சொன்ன தாதியையும் தனபால

ளேயும் கொலுமண்டபம் அழைத்துவரும்படி இரண்டு ஆட்களேயனுப்பினுன். அவ்விதம் அவர்கள் போய் இருவர்களேயும் அழைத்துவந்தார்கள். உடனே தாதியினிடம்;

ம. உனக்கு சின்ன ராணியார் கொடுத்த ரூ.5000 யையும் என்ன செய்திருக்கிருய்? உள்ளபடி சொல் இல்லாவிட்டாலுன்னுயிருக்கே ஹானிவரும் இதைப்பற்றி நேற்று ராணியார் ராஜாவிடஞ் சொன்னுர்களென்ருன்.

தா. ஆகா நேற்று இராத்திரி ராஜாவந்திருந்தாரல்லவா. அப்பொழுது சொல்லியிருக்கிருர்களென்று எண்ணி சுவாமி அந்த ரூபாயில் 1000-ம் ஆசாரியிடத்தில் நகைசெய்யக் கொடுத்திருக்கிறேன். மீதத்தை வீட்டில் வைத்திருக்கிறேனென்ருள்.

ம. அப்படியானுல் உன்னுடன் ஆள் அனுப்புகிறேன் போய்4000 ரூபாயையுமெடுத்துக்கொண்டு வந்து சேரவேண்டுமென்று சொன்னுன்.

தா. நல்லது அப்படியே செய்கிறேன்.

ம. ஆரடா ராமலிங் சுந்தரலிங் அவள் கூடப்போய் ரூபாயை எடுத்துக்கொண்டு அவளேயுங் கூட்டி வாருங்களென்ருன்.

சே. அப்படியே மகராஜ் செய்கிருேம்.

உடனே தாதியுடனிருவர்களும் அவள் வீட்டிற்குப் போய் ரூபாயை எடுத்துக்கொண்டு கொலுமண்டபம் வந்து சேர்ந்தார்கள்.

சே. மகராஜ் ரூபாயுடன் வந்து சேர்ந்தோம். இதோ ரூபா யென்று ராஜசமுகத்தில் வைத்தார்கள்.

தாதியும் பக்கத்தில் நின்ருள்.

ம. தாதியைப்பார்த்து நீ நகை செய்யக் கொடுத்திருக்கும் ஆசாரியின் பெயரும் தெருவுஞ் சொல்.

தா. ஹரிசிங் தெரிவிலிருக்கும் மோகனவேலாசாரி.

ம. லால்ஸிங்.

சே. மகராஜ்.

ம. நீ ஹரிசிங் தெருவிலிருக்கும் மோகனவேலாசாரியை இந்தத்தாதி செய்யக் கொடுத்திருக்கும் நகையுடன் வந்துசேரும்படி சொல்.

சே. அப்படியே மகராஜ் என்று சொல்லி அந்தத் தெரிவிற்குப் போய் அவ்வாசாரியை நகை பணமுதலானவைகளுடன் கூட்டி வந்தான்.

சே. மகாராஜ் ஆசாரிவந்து விட்டான்.

ம. ஆசாரி உன்னிட மிந்தத்தாதி எவ்வளவு ரூபாய் நகை செய்யச் சொல்லிக் கொடுத்தாள்.

ஆ. சுவாமி ஆயிரம் ரூபாய் நாலு நகை செய்யச் சொல்லிக்கொடுத்தாள்.

ம. நீ உனக்கு இவ்வளவு ரூபாய் திடீரென்று ஏதென்று கேட்டாயா ?

ஆ. தனக்குச் சின்னராணி அம்மாள் நகை செய்துகொள்ளப் பரிசளித்ததாகச் சொன்னாள்.

ம. நல்லது நீ இப்பொழுது என்ன செய்திருக்கிறாய்?

ஆ. நான் 500 ரூபாய்க்கு இரண்டு நகை செய்திருக்கிறேன். 500 ரூபாய் மீதி. இரண்டும் இதோ இருக்கிறதென்று முன்னேவைத்தான்

ம. நல்லது நீ போகலாம்.

ம. தாதியைப் பார்த்து உனக்கு ராணியம்மாள் எத ற்காக இந்த ரூபாய் கொடுத்தார்கள்?

தா. அவர்கள் சொற்படி நடந்ததற்காக இனும் கொடு த்தார்கள்.

ம. அப்படி அவர்கள் நடக்கச் சொன்னதென்ன ?

தா. இளவரசர் என்னை இராத்திரி உன்னறைக்கு வந்து பல வந்தம் பண்ணினுரென்று ராஜ சமுகத்தில் சாதி த்துவிட வேண்டுமென்றூர்கள்.

ம. ஆனுலவர் உன்னை ஒன்றுஞ் செய்யவில்லையே.

தா. இல்லை. சின்னராணியம்மாளுக்காகத்தான் அவ் விதஞ் சொன்னேன்.

ம. நீ அவ்விதஞ் சாதிக்கலாமா ?

தா. சுவாமி இல்லாவிட்டால் என்னைக் கெடுத்துவிடு வார்களென்றபயத்தினுலும், பணங்கிடைக்கிறதென்ற ஆசை யினுலுஞ் சொல்லிவிட்டேன். ஆனதால் என்னை மன்னிக்க வேண்டுமென்று காலில் விழுந்தாள்.

ம. யார் அங்கே நிற்கிறது.

சே. சுந்தரலிங் மகாராஜ்.

ம. இத்தாதியை மறு உத்திரவு வரைகாவற்கூடத் தில் வைத்திரு.

சே. அப்படியே செய்கிறேன் மகாரரஜ்.

இவ்வளவையுங் கண்ணுரப் பார்த்துங் காதாற் கேட் டுங்கொண்டிருந்த இராஜனைவர் ஹா! என்னருமைப் புதல் வனை இனி என்று காண்பேன். குற்றமற்றரத்னமாயிருந்த படியால் அவன் ஒரே வார்த்தையிற் பதில் சொல்லிவிட்

டான். குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பைப்போலொத்த என் சின்னராணியாலல்லவோ இவ்வளவு கொடூரமான அநீதக்காரனானேன். முன்னமேயே நமக்குக் குலகுருவைப்போன்ற சுந்தரர் சொன்னாரே! அதைக் கேளாமற் செய்த செய்கைக்கு இவ்வளவு துன்பமும் போதாமலின்ன மென்னென்ன வருமோ தெரியவில்லையே; ஸ்வாமிதானறிவாரென்று பெரு மூச்சு விட்டு மண்டபம் விட்டெழுந்திருந்து அரண்மனைக்குட் பிரவேசித்து தன்னறையிற் படுத்துக்கொண்டார்.

மறுநாள் மந்திரியானவர் நேற்று மண்டபம் விட்டெழுந்துபோன அரசன் யெப்படியிருக்கிறாரென்று பார்த்து வருவோமென்று அரண்மனைக்குப்போய்ப் பார்க்கையிலவர் சித்தப்பிரமை கொண்டு நானாவிதமாய்ப் புலம்புகிறதும், பிறகு கொஞ்சநேரம் சுகமாய்ப் பேசுகிறதுமாயிருந்தார். மந்திரியைக் கண்ட இராஜன் நீர் வந்த காரணமென்ன? யென் மகனாகிய ஞானமிர்தம் வந்திருக்கிறானா? அல்லது எங்கேயாவது இருக்கிறதாகக் கேள்விப்பட்டு அதைச் சொல்லவந்தீராவென, அதற்கு மந்திரி நானவரைப்பார்த்து வரும்படி அனுப்பிய ஆட்களின்னம் வரவில்லை யென்றான். நல்லது அலந்தலையை யென்ன செய்தீரென்றார். அவர்களுக்குச் செய்யவேண்டிய தெண்டனையின் விபரமெதிர் பார்க்கிறேனென்றான். நல்லது அவளை சிரசாக்கினை செய்யச் சொல்லிவிடு மென்றார். மந்திரி தாங்கள் திடீரென்று அவ்விதஞ் செய்வது சரியல்ல, அவர்களையுங்காவற்படுத்தியிருந்து பின்னால்தான் எதாவதொரு எற்பாடு செய்ய வேண்டு மென்றான். நல்லது அப்படியே செய்யுமென்று ஆக்ஞாபித்தனர்.

உடனே மந்திரி காவலாளிகளுக்கு உத்தரவளித்து சின்ன ராணியாகிய அலந்தலையை காவற் படுத்தி விட்டான்.

இவ்விதமோராண்டு கழிந்தது: இராஜனு மவ்விதமாய்த் தானிருந்தான். தனபாலனும் ஞானமிர்தத்தின் எக்கங் கொண்டு தன்னறையைவிட்டு வெளியே வராமலும் சரியான நேரத்திற்காகாரம் பண்ணுமலு மிருந்தான்.

இவிடத்திலிப்படியிருக்கையில் ஞானமிர்த மிருந்த டில்லியில் சக்ரவர்த்தி திடீரென்று விஷசுரங்கண்டு இறந்துபோக சுற்றுப்பக்கங்களிலிருந்த துலுக்கர்கள் படையெடுக்க வாரம்பித்தனர். இதையறிந்த டில்லி நகரத்தார் இவ்விடமிருக்குஞ் சேனையை நடத்தி எதிராளிகளை மடக்குந்தன்மையுள்ள வர்களைக்காணோமே! யென்று பரிதபித்து ஞானமிர்த மிருக்குமிடம் வந்து பேசிக்கொண்டிருக்க; பெரியவரான ஞானமிர்தம் அவர்களைப் பார்த்து நானந்த சேனைகளை நடத்தி எதிரிகளை முறியடிக்கிறேன்; நீங்களொன்றுக்கு மஞ்சவேண்டாமென்றுசொல்ல, அதற்கவர்கள் சடைமுடியுடன் இருப்பவர்கள் யெப்படிச் செய்துமுடிக்கக்கூடும். அரசர்களுக் குரியவில்வித்தைபிற் றேர்ந்தவர்களால் முடியக்கூடியதைத் தாங்கள் முடிக்கிறதாய்ச் சொல்லுகிறீர்களே யென்று சொல்லுற்றனர்.

அதைக்கேட்ட பெரியவர் நானுமொரு ராஜகுமாரன் தான்யென் கஷ்ட காலத்தினிமித்த மிவ்வித மிருக்கிறேனென; அப்படியானல் சீக்கிறமாயுத்தமாகுங்களென்று சொல்லி நாவிதனையழைத்துவந்து வபனமுதலானதுகள் செய்வித்து உடைகள்தரித்தபின் பார்த்தவூரார் திகைக்கும்படியா யிருந்தது. உடனே சேனைகளை ஆயத்தம் பண்ணி யுத்தக்கொடிக்கட்டி விட்டார்கள். எதிரிகளாய் வந்திருந்த துலுக்கர்கள் "யாரோ ஒருவன் சேனையை நடத்திக்கொண்டு வருகிறான். அவனை இலேசிற் செயித்து விடலா" மென்று வெண்ணங்கொண்டு யுத்தத்திற் காரம்பித்தனர்.

ஞானமிர்தம் சேனைநடத்துவதையும், பாணங்கள்விடு வதையும் பார்த்த எதிரிகள் நாமிவனை இலேசாய் நினைத் தோமே. இப்பொழுது இவனை ஜயிப்பது கஷ்டம் போலத் தோன்றுகிறதென்ற பயம் மனதிற்தோன்றி விட்டது. பின்பு எட்டு நாள்வரை கொடூரயுத்தம் நடந்தது. அதில் துலுக்கர்கள் தோல்வியுற்று ஓட்டம் பிடித்தார்கள். அதன் பின் டில்லியிலரசாள ராஜன் இல்லாததைப் பற்றி நகரத்தா ரெல்லோரும் சபைகூடி யோசிக்கலாயினர். இதிற் சிலர் இப் பொழுது நம்முடைய ராஜ்யத்தின் பேரிற் படையெடுத்து வந்த துலுக்கர்களை முறியடித்த இராஜகுமாரன் படிப்பிலும் வித்தையிலும் சாமர்த்தியமுள்ளவராயும், ராஜயோக்கியாம் சம் பொருந்தியவராயு மிருக்கிறபடியால் அவருக்கே பட்டங் கட்டி வைத்து விடலா மென்று முடிவுசெய்து ஞானமிர்தத் தைச் சிம்மாஸன்மேற்றிமுடிசூட்டினார்கள்.

அதன்பின் இந்தவைபங்களெல்லா மிவ்வரசனுக்குக் கப்பங்கட்டுஞ் சகலசிற்றரசர்களு மறியலானார்கள். அதி லொருவரான சிருங்கராஜனுக்கு இதுதெரிந்ததும், தன்மகன் ஜாதகத்தில் சக்கிரவர்த்தியாவா னென்றிருந்தபடியாலும், தேசாந்திரியாய்ப் போயிருக்கிற படியாலும் அவனுயிருக்க லாமோ வென்னும் சந்தேகத்துடனிருந்தார். இப்படியிருக் கையில் டில்லியில் ஞானமிர்தத்திற்குச் சக்கரவர்த்திப் பட்ட மான இரண்டாமாசம் நமக்குக் கப்பங்கட்டுஞ் சிற்றரசர் களில் யார் யார் பாக்கியா யிருக்கிறார்கள். அவர்கள் ஜாபிதா தயார் செய்து சீக்கிரங்கொண்டு வரும்படி மந்திரிக்காக் ஞாபித்தனர். அதன்படி எடுத்தெழுதினதில் பன்னிரண்டு பெயர்கள் பாக்கியுள்ளவர்களாயும், அதில் தன் தகப்பனு மொரு வராயு மிருக்கக்கண்டு, நல்லது உடனே இவர்க ளெல்லாருக்கும் அவரவர்கள் செலுத்த வேண்டிய பாகிக்

த்துகையுடன் டில்லிவந்து சேரும்படியாய்த் தாக்கீது அனு ப்பும்படி உத்திரவு செய்தார்.

அப்படியே மந்திரி தாக்கீது அனுப்பலாயினன். ஒரு தூதுவன் ஓலைகொண்டு வந்து சிருங்கராஜன் முன்னிற்க அதைக் கண்ட ராஜன் ஓலையை வாங்கிப்பிரித்துப் பார்க்க அதில் தாம் செலுத்தவேண்டியதிருக்கும் பாக்கிக்கப்பத்து டன்வந்து சேரவேண்டியதென்றெழுதி, ஞானமிர்தமென்று கைச்சாத்திட்டிருந்தது. அதைக்கண்டதும் ராஜனுக்குச் சந்தோஷ முண்டாயிற்றென்றாலும் கொஞ்சஞ் சந்தேகந் தோன்றி மந்திரியிடம் யோசிக்கலாயினர். அப்பொழுது மந்திரி அனுப்பிய ஓலைப்பிரகாரம் பணத்தையெடுத்துப் போய் அவரைக்கண்டால் நமது சந்தேகம் நீங்கிவிடு மென்றான். இவ்விதம் மந்திரி சொல்லக்கேட்ட ராஜன் பண த்தை உடனே தயார் செய்யச்சொல்லி ஆக்ஞாபிக்க, மந்திரி யும் பணமெல்லாம் தயாரித்து ராஜனுக்குத் தெரிவித்து பிர யாணத்திற்கு நல்லநாள்பார்த்து இரண்டாவது மந்திரியிடம் ராஜ்யத்தை ஒப்புவித்து பயணமாகி டில்லி வந்துசேர்ந்து ராஜசபைக் கேகினர். சிருங்கராஜன், தனபாலன், மந்திரி இம்மூவர்களையுஞ் சக்கரவர்த்தி தகுந்தபடி மரியாதை செய் து பணத்தை வாங்கிக் கொண்டு, தன்மந்திரியை இம்மூவர் களுக்குந் தன்னரண்மனையில் ஒருஜாகை கொடுக்கவேண்டிய தென்று சொல்ல, மந்திரி இதென்ன விநோதமாயிருக்கிறது இவர்களுக்குமட்டும் அரண்மனையில்ஜாகைத்திட்டஞ்செய்து கொடுக்கச் சொல்லுகிறார்; மற்ற சிற்றரசர்களை கவனிக் காமலிருந்தார்; இதிலேதோ ஒரு விசேஷமிருக்கிறதென் றாலோசித்து உத்தரவின்படி அரண்மனையில் ஜாகைகொடுத் தார்.

சற்று பொறுத்து ஞானமிர்தம் சிம்மாசனம் விட்டெ ழுந்து தன் தகப்பன் சகோதரன் இருக்கு மறைக்குப்போய் அவர்களைக் கட்டிச்சேர்த்து தழுவியென்சிறிய தாயார்செய்த நன்மையால் யெனக்குச் சக்கரவர்த்திப் பட்டங்கிடைத்த தென்று சொல்லி; தான் பட்ட கஷ்டங்களையும், பின்பு பட்ட மடைந்த விபரத்தையுஞ் சொன்னான். அதன் பின்னவர்கள் நீர் ஊரைவிட்டுவந்த பிறகு இன்னவைகள் நிகழ்ந்தென வெ ன்றதை விபரமாகச்சொல்லக்கேட்டு யெனக்கு நன்மைசெய் த யென்சிறிய தாயார் சிறையிருக்க, நான் பட்ட மாளுவதிற் பிரயோஜனமில்லை. ஆனதினால் சீக்கிரம் நாமெல்லோரும் பிர யாணப்பட்டு அங்கதேசம் போயவர்களை சிறை நீக்கி தன பாலனுக்குப் பட்டங்கட்டிவைத்துவிட்டு சுந்தரரும் நானும் டில்லியில் வசிக்கவும், என்சிறியதாயாரும் யென் தாயாரும் தாங்களும் அங்கதேசத்தில் வசிக்கவும் வேண்டுமென்ற பிரி யத்தை நிறைவேற்றக் கோருகிறேனென்று ஞானமிர்தஞ் சொல்லலுற்றனர். இவ்விதஞ்சொன்னபொழுது தகப்பனு கிய சிருங்க ராஜன் ஹா! ஹா!! நாம்முன் தனபாலனும் மந்தி ரியுஞ்சொன்னதைக் கவனியாமற்செய்த தெண்டனை யெவ் வளவோ கொடூரமானதா யிருந்தாலும் அதைக் கவனி யாமலும் சிறியதாயார் செய்தகெடுதியை நன்மையாகநினைத் துமிருக்கும் பிள்ளைக்குத் தீங்குசெய்த நான் என்னகதியை அடைவேனோவென்று யோஜித்துக் கொண்டிருந்தான். கடை சியாய்மூவரும் யோஜித்து அப்படியே செய்வது உசிதமாய் த்தான்தோன்றுகிறதென்று தீர்மானித்துக்கொண்டார்கள். அஸ்தமனமானதுந் தன் தகப்பனார் முதலானவர்களைத் தனதரண்மனைக்குக் கூட்டிக்கொண்டு போய் தன்னுடன் வைத்து ஆகாரமுதலானதுகள் கொடுத்து சற்றுநேரம்பேசி க்கொண்டிருந்து அவரவர்க ளறைக்குப்போய் நித்திரை செய்தனர். மறுநாள் சாப்பாடு முடிந்ததுந் தன் மகனோடு

கொலுமண்டபஞ் சென்று ஓராசனத்திருந்து அன்று தன் மகன் நடத்துந் தர்பாரைப்பார்த்துக் கொண்டிருந் தான்.

## 3 வது அத்தியாயம்

அப்பொழுது ஒரு மல்லன் தன் பிழைப்புக்காக அயலூர் போகையில் வழியில் ஒரு மனிதனைக்கண்டு நீர் யார்? உம்முடைய பெயரென்ன? என்று கேட்டக; அதற்க வன் தர்பங்காவூரிலுள்ள ஒரு குடியானவன். என்பெயர் சிங் காரலால் என்ருன். அப்பொழுது மல்லன் நீரென்ன வேலை யா எவடம் போகிறீர்? நான் அதோதெரிகிற மலைக்குப் போகிறேனென்ருன். அம்மலை எத்தனை தூரமிருக்கும்? அது இவடம் இருந்து குறைந்தது 20-மைலிருக்குமென் ருன். அங்குயென்ன வேலையாய்ப் போகிறீர்? நேற்றிராத்திரி ஒரு சந்நியாசி அவிடத்தில் ஒரு பெண் போதுமான திரவி யத்தோடு இருப்பதாயும், நாலு பூதங்கள் இராத்திரியில் அவளுக்குக் காவல் காப்பதாயும், எவ்வொருவர் அப்பெண் ணைக் கண்டழைக்கிருர்களோ அப்பொழுது பூதங்கள் விலகிப்போமென்றும் என்னூரில் ஒருவருடன் சொல்லிக் கொண்டிருந்தார்.

அதை பக்கத்துத் திண்ணையில் படுத்துக் கொண்டி ருந்த நான் கேட்டுக்கொண்டிருந்து பிரயாணப் பட்டு அப்பெண்ணைப் பார்க்கப் போகிறேனென்று சொன் ஞன் அதற்கு மல்லன் நானுங்கூட வரலாமா வென்ருன். அதுகேட்ட சிங்காரலால் பெண்ணைக் கவர்ந்துகொள்ளக் கூடாது. அவளிடமிருக்கும் பணத்திற்பாதி தருவேனென் ருன். சம்மதித்து இருவரும் மலையைநோக்கிப் போனர்கள். பத்தாவது மைலில் சற்று உட்கார்ந்து போவோமென்று

உட்கார்ந்தார்கள். அது சோலையா யிருந்தபடியாலிருவரும் சற்று நித்திரை செய்யலாயினர். நேரமும் பதினைந்து நாழிகையாய்விட்டது. ஒரு நாகசர்ப்பமானது மல்லனைக்காலிற்றீண்ட; உடனே யெழுந்து சிங்காரலாலிடந்தன்னைச் சர்ப்பம் தீண்டிவிட்டதாய்ச் சொன்னான். அதற்கவன் நீ பயப்படாதே நானதை வருத்தி உடனே விஷத்தை வாங்கும்படி செய்கிறேனென்று மந்திரஞ் செபிக்கலாயினான். ஒருமணி நேரத்திற்கப்பால் ஒரு நாகசர்ப்பமானது படமெடுத்துக்கொண்டு அவன் முன் வந்து நிற்க, அவன் உடனே கடிவாயின் வழியாய் விஷத்தை வாங்கிக்கொள்ளென்று சொன்னவுடன் மல்லனுடைய வலதுகாலின் கெண்டைச் சதையிற் கொத்தி விஷத்தை வாங்கிற்று. உடனே அதற்கேதேதோ செய்து பாம்பை யனுப்பிவிட்டு மல்லன் முகத்தில் நீர்தெளித்து எழுப்பலானான். பின்பிருவரும் வழி நடக்கவாரம்பிக்கையில் முன் சந்நியாசியாற் கேள்விப்பட்டவனும் வந்து இவர்களுடன் சேர்ந்து, நீங்களிருவரும் எவ்விடம் போகிறீர்களென்று வினவலானான்.

அதற்கிருவர்களும் தாங்களெண்ணிப்போகு மெண்ணத்தையும் வழியிற்பட்ட அவஸ்தையையுஞ் சொல்லக் கேட்டு; ஆகா! சுந்தரலால் பெரிய மோசக்காரனென்று யெண்ணிக்கொண்டு நானுங்கூட வருகிறேனென்றான். அப்பொழுது அவர்கள் துணை சேர்வது நல்லது தான்; ஆனால் நீயும் மல்லனும் பணத்தை யெடுத்துக்கொள்ள வேண்டியது; நான் பெண்ணை யெடுத்துக்கொள்வேனென்று சுந்தரலால் சொன்னான். நல்லதென்று சொல்லி மூவர்களும் பிரயாணப்பட்டுப் போனார்கள். மலைக்கு ஒரு மைல் தூரத்தில் ஒரு கரடியானது இம்மூவர்களையும் துரத்திக்கொல்ல ஆரம்பித்துக் கிட்டே நெருங்கிவிட்டது. அதுகண்டவ

களில் சுந்தரலாலும் பின்னால் வந்து சேர்ந்தவனும் ஒரு மரத்திலேறிக்கொண்டார்கள். மல்லன் தனியாக கரடியுடன் வெகு நேரம் போராடிக் கரடியைக் கொன்றான். அதன் பின் மரமேலிருந்த இருவர்களும் கீழே இறங்க மூவரும் பிரயாணமாகிப்போனார்கள்.

மலைமேல் வெகு நேரம்போய்க் கொண்டிருக்கையில் மூவரும் சற்றுவிலகிப்பார்க்கலாயினர். இவ்விதம் பார்த்து வருகையில் சந்நியாசியாற் கேள்விப் பட்டவனும் பின்னால் வந்து சேர்ந்தவனுமானவன் கண்ணிலப் பெண்மணி தோற்றலாயினள். உடனே அவன் மற்றிருவர்களையுங் கூப்பிட்டுக் காட்டலாயினன். தன்னை முதலிற் பார்த்தவனின்னானென்று திட்டமாய்ப் பெண்ணுக்கு மாத்திரந்தான் தெரியும். பெண் உடனேமலையைவிட்டு இறங்கவேண்டுமென்று சொன்னாள். அவ்விதம் நால்வரும் பணங்களை எடுத்துக்கொண்டு ஊர் நோக்கிப் பிரயாணப்பட்டு வருகையில்; இடை வழியிலே பெண்ணை எனக்குனக்கென்று வழக்குண்டாகி பக்கத்திலிருந்த அமிர்தசாரென்னும் பட்டணத்தரசனிடம் போய்ச் சொல்லிக்கொண்டார்கள்.

அவ்வரசன் இவர்கள் ஒவ்வொருவரின் வாக்கு மூலங்களையும் விபரமாகக் கேட்டு; தனக்கொன்றும் புலப்படாமையால் சக்கரவர்த்திக்கு அனுப்பிவிட்டான்.

ஞானமிர்தமுந் தகப்பனும் கொலுமண்டபம் ஒன்றாய் வந்ததினம் இந்தக் கேசும் வந்தது. அதைப்பற்றின பேப்பர் முழுவதையுங் கவனித்துப் பின்பு கேசை விசாரிக்கலாயினர். முதலில் மல்லனையும், இரண்டாவது சுந்தரலாலையும், மூன்றாவது சந்நியாசியாற் கேள்விப்பட்டவனையும், நான்காவது பெண்ணையும், அதிக கவனத்துடன் விசாரித்து அடியில் வருமாறு தீர்ப்புச் சொல்லலாயினன்.

(1) சந்நியாசி சொல்லும் பொழுது கேட்டுக்கொண்டிருந்த சுந்தரலால் அப்பெண்ணையும் அப்பொருளையும் இச்சித்தவனுகையால் சோரனுகிறுன்.

(2) இவனையும் மூன்றுவதுசேர்ந்தவனையும் கரடியினிடமிருந்து உயிரைக்காப்பாற்றிய படியால் மல்லன் இருவர்களுக்குந் தர்ம சாஸ்திரவிதிப்படி தகப்பனுகிற படியால் மல்லனுக்கு அப்பெண் மருமகளாகிறுள்.

(3) மூன்றுவது வந்து சேர்ந்தவனுக்கு சந்நியாசி சொல்லியபடியாலும் அவர் சொல்லியபடி முதலில் பெண்ணை நோக்கியபடியாலும் அவனே அப்பெண்ணுக் குரியவனென்று சாஸ்திர யுக்தமாய்த் தோன்றுகிறது. ஆனபடியால் மூன்றுவது வந்தவனுக்குப் பெண்ணும் மற்றிருவர்களுக்குப் பணமும் பாத்தியதை யுடையதாகுமென்று சொன்னுன்.

(4) இதிற் சுந்தரலாலாகிய சோரனுக்கு என் பணம் கொடுக்க வேண்டுமென்று கேட்டால், சுந்தரலால் அன்று அங்கு வராவிட்டால் மல்லன் சர்ப்ப விஷத்திலிறந்து விடுவான். மல்லன் இறந்திருப்பானுகில் மூன்றுவது வந்தவன் கரடியால் மாண்டிருப்பான். ஆனதால் மல்லனுக்கு சுந்தரலால் ஆபத்தை நீக்கியதந்தையாயும். மூன்றுவது வந்தவனுக்கும் சுந்தரலாலுக்கு மல்லன் ஆபத்தை நீக்கிய தந்தையாயுமாகிறுன். இதில் சாஸ்த்ர யுக்தமும் தாய் தந்தையர்களைக் காப்பாற்றுவது சேயர்களின் கடமையாதலால் பணத்தை இருவரும் பங்கிட்டுக் கொள்ளும்படி தீர்ப்புச் சொல்லப்பட்டது. இங்குள்ள வைபவங்களையெல்லாம் அதிகக் கவனத்துடன் செவியுற்றிருந்ததகப்பன் சந்தோஷமடைந்து கொலுக்கலைந்தபின் தகப்பனும் மகனும் அரண்மனைக் கேகி நித்திய கடனை முடித்துக்கொண்டு போஜனமருந்தி நித்தி

ரைபோயினர். மறுநாள் விடிந்ததும் தந்த சுத்தி செய்து பசியாற்றிக்கொண்டு வெளியேறி அறையிலுட்கார்ந்து பேச ஆரம்பித்தார்கள். அப்பொழுது தகப்பனிடம் மகன் அங்க தேசம் போய்த் தம்பிக்கு அத்தேசத்தைப் பட்டம் கட்டி வைத்துவிட்டு நமது குலகுருவாகிய சுந்தரரையுங் கூட்டிக்கொண்டு வரவேண்டும். ஆனதனு லின்று சாயந்திரம் பிரயாணப் படுவோமென்று சொன்னுன். அந்தப்படியே செய்வோமென்று சிருங்கராஜன் சொல்லலுற்றனன். உடனே சக்கரவர்த்தி மந்திரியை அழைப்பித்து அங்கதேசத்திற்குப் போகவேண்டியதிருக்கிற படியால் அதற்கு வேண்டிய உபகரணங்கள் தயார் செய்யும்படி ஆக்ஞாபித்தனர். அதைச் சிரசின்மேல் வகித்தவனு யுடனே தயார் செய்து சக்கரவர்த்திக் கறிவித்தான். அன்று சாயந்திரம் தகப்பன் மக்கள் மூவரும் மந்திரியும் பிரயாணப்பட்டு அங்கதேசம் போய்ச் சேர்ந்தனர்.

உடனே சக்ரவர்த்தியாகிய ஞானமிர்தம் தன் சிறியதாயாரிருக்குஞ் சிறை கூடத்திற்குக்கேகிவலம்வந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, எழுந்து நின்று அடியேனுல் தங்களுக்கு நேர்ந்த பெருங் கஷ்டத்தை மனதிலுன்னுது, ஏழையின்பேரில் கிருபை வைத்து, மன்னித்து, அரண்மனைக் கெழுந்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டனன்.

இவ்விதஞ் சொல்லும் ஞானமிர்தத்தின் வார்த்தைகளெல்லாவற்றையுங்கேட்ட அலந்தலையானவள் அப்பா? உன்னுல் நானிதுவரையடைந்த கஷ்டங்கள் போதாதென்று இன்னுமென்ன கஷ்டங்களை யனுபவிக்கும் பொருட்டு அரண்மனைக் கழைக்கின்றுய், அடிக்கடி சிறையிருப்பதும் பின்னரண்மனைக் கேகுவது மெனக்கதிக அவமானமாயிருக்கிறபடியால். இவ்விடத்திலேயேஇருந்து வாழ்நாளைக்கழிப்பதேநன்

மையாகத் தோன்றுகிறபடியால் நீ சொல்லும் வண்ணஞ் செய்ய எனக்குப் பிரியமில்லை என்று சொல்லினள்.

அதுகேட்டவன் இனியொருக்காலமவ்வித மேற்படக்காரணமில்லை. ஏனெனில் தங்கள் புத்ரனாகியதனபாலனுக்கே அங்கதேசத்தை அரசாளும்படி முடி சூட்டப்போகிறோம். நானுமிவடத்திலிருப்பதில்லை. ஆகையால் தங்களுக்கு தொந்தரவு மேற்படாது. இட்சணமே அரண்மனைக்கேகி முடி சூட்டுக்கு வேண்டுங் காரியங்களைத் திட்டஞ் செய்யப் பிரார்த்திக்கிறேனென்றனன்.

உடனே யாதொன்றும் பதிற் பேசாமல் சின்னராணியானவள் அரண்மனைக்கேகி தன்னிருப்பிடஞ் சென்றிருந்தனள். பின்னால் அவளுடைய ஊழியக்காரிகளும் சகிமார்களும் போய்க்கண்டு அவளுடன் வசித்தனர். அதன் பின் உடனே சுந்தரர்வாச ஸ்தானத்திற்குச் சென்று முக்கால் வலம் வந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து எழுந்து நின்ற ஞானமிர்தத்தைச் சுந்தரர் கட்டித் தழுவி என்றுந்தீர்க்காயுளாச் சகல சம்பத்துடனு மிருப்பாயென்றாசிர் வதித்து உட்காரும்படி சொல்லி சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தார். அதற்குள் தந்தையிடயிருந்து ஆள்வர சுந்தரரிடம் செலவு பெற்று அரண்மனை வந்து தன் தாயிருக்குமிடம் போய்க் கண்டு வலம் வந்து நமஸ்காரஞ்செய்ய அவளும் மிக்க சந்தோஷத்துடன் ஆசிர்வதித்தனள். பின்பு ஞானமிர்தம் முதலான யாவத்திராட்களும் ஸ்நானபானுதிகள் முடித்துக்கொண்டு தர்பார் மண்டபத்திற் கூடி மந்திரி பிரதானிகளையும் சுந்தரரையும் வரவழைத்து, தனபாலனுக்கு அங்க தேசத்தை முடி சூட்ட வேண்டியதற்குரிய ஏற்பாடுகள் செய்து, நல்ல சுபமுகூர்த்த தினமும்பார்க்க வேண்டுமென்று பேசித்தீர் மானித்தார்கள். அதன்படி

சோதிடர்களை வரவழைத்து நல்லதினம்பார்த்துக்கொண்டு அதற்கு வேண்டிய ஏற்பாடுகளுஞ் செய்யலுற்றனர்.

அங்கதேசம் பூராவும் பந்தலலங்காரஞ் செய்யப்பட்டது. அன்ய ராஜர்களுக்கெல்லாம் பட்டாபிஷேகப் பத்திரிகையு மனுப்பிக் குறித்ததினத்திற் சகலரும் வந்து சேர்ந்தனர். குறித்த சுபமுகூர்த்தத்தில் சுந்தரரென்னுஞ் சற்குருவின் கையினல் தனபாலனுக்கு அங்கதேசத்தை யாளும்படி முடிசூட்டி, சகல பெரியவர்களாலும் ஆசீர்வாதமுஞ் செய்யப் பட்டது.

பின்பு வந்திருந்த இராஜர்களுக்கும் மற்றவர்களுக்கும் சந்தனந் தாம்பூலம் புஷ்பாதிகளளித்தார்கள். பகல் பதினொரு மணிக்கெல்லாம் சகலரும் சாப்பிட்டு முடிந்தது. அதன்பின் இரண்டுமணிமுதல் ஆறுமணிவரை பாவகதர்களின் பாட்டுகளும், பலவிதமான வாத்தியங்களும், சர்க்கஷ், குஸ்தி முதலானவைகளும், கடைசியாய்த் தேவதாசிகளின் கோலாட்டமும் நடந்தது. பந்தலில் வந்திருந்த சகலத்திராட்களும் ஒவ்வொன்றையும் மிக்ககவனத்துடன் கேட்டு ஆனந்தமடைந்தனர். மறுதினம் வந்திருந்த சகலரும் தன் தன்னூருக்கேகினர். பின்பு சக்கரவர்த்தி டில்லிநோக்கிப் பிரயாணப்பட்டு சுந்தரரைத் தன்னுடன் வசிக்கும்படியாய்க் கூட்டிக்கொண்டு டில்லிவந்து சேர்ந்து ராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தார். அங்கதேசத்தில் ஞானமிர்தமாகிய டில்லிச் சக்கரவர்த்திக்குக் கலியாண முடிக்கவேண்டுமென்று யோசித்து சிருங்கராஜனும் மந்திரியும் டில்லி நோக்கிப் போனர்கள். தந்தையைக் கண்டு நமஸ்கரித்து க்ஷேமலாபங்களை விசாரித்து ஆகாராதிகள் முடித்துக்கொண்டு சக்ரவர்த்தி தர்பார் மண்டபமேகினர். அதன்பின் சிருங்க ராஜனும் மந்திரியும் சுந்தரரிருக்கும் இடம்போகலுற்றனர். அது

கண்ட சுந்தரர் நல்வரவுகூறி ஆசனமளித்து யோகக்ஷேமங்களை விசாரித்துக்கொண்டு திடீரெனவிப்போது இவடம் வந்த காரணம் என்னவென்று வினவலாயினர்.

அதற்கு மந்திரி நம்முடையசக்கரவர்த்திக்குத் திருமண முடிக்க எண்ணங்கொண்டு சுவாமியவர்களின் சேவையைக்கருதி வந்தோமென்று சொல்லினர். அக்காரியம் நடக்கவேண்டியது மிக்க அவசரந்தான். எனக்குமவ்வித எண்ணம் இப்போது தோன்றியிருக்கிறது. அதற்கிசைவாகவே நீங்களும் வந்து சேர்ந்தீர்கள். இதை வைத்துக்கொண்டே தீர்மானஞ்செய்து விடுவோமென்று சுந்தரர் சொல்லினர். இவ்விதம் மூவருங்கலந்து கொண்டு அரண்மனை யோரமாய் ராஜன் வரும் அறையிற்போயிருந்தனர். சாயந்திரங் கொலுக் கலைந்தபின் வழக்கம் போற் சக்ரவர்த்தி சுந்தரரைப் பார்க்கும்படி அதற்கென்று ஏற்படுத்தி யிருக்குமறைக்கு வந்தனர். அங்கு இம்மூவரு மிருக்கக்கண்டு சந்தோஷசித்தனுயிருந்தான். ஞானமிர்தத்தை பார்த்து சுந்தரர் அடியிற் சொல்லும் பாட்டினது அர்த்தத்தை சொல்வாய் என்றனர்.

பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த
மக்கட்பேறல்ல பிற.
குழலினிது யாழினி தென்பர்தம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.
மக்கண்மெய் தீண்டலுடற் கின்ப மற்றவர்
சொற் கேட்டலின் பஞ்செவிக்கு.

உந்து நீர்க்கடலு குத்தபார் முழுவது மொருங்கே
வந்து தாடொழு மரசியல்வள மெலாம் பெறினும்
இந்திராதிபர் பெரும்பதத்திருக்கை யெய்திடினு
மைந்தரின்றியே வாழ்வது வாழ்வுமற்றன்றே

விரிகடலமிழ்தமும் வேலை ஞானமும்
செருமுகத் தழலுமிழ் சிறுகண்யானையு
மெரிமணிக் குப்பையு மெளிதினெய்தலா
மருமகப் பெறுதன் மற்றரிய தென்பவே.

சொன்னகலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலும்
என்னபயனுடைத்தா மின்முகத்து—முன்னம்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச
சிறுகுதலைக் கேளாச் செவி.

பின்னும்

இல்லறத்திருந்து இதயமடக்கிய
வல்லவன் றானே மகாயோகியாவன்.
எத்தொழிலைசெய்தாலு மேதவத்தைபட்டாலும்
முத்தர்மன மிருக்கு மோனத்தே—சித்தம் சித்தம்
காதி விளையாடி யிருகைவீசி வந்தாலும்
தாதிமன நீர்க்குடத்தே தான்

இவைகளை யெல்லாம் செவியுற்ற ஞானமிர்தம் புத்திர மாக்ஷியின்றி உலகின்வாழ்வு சிறப்பன்றென்றும், இல்லறமே உயர்ந்தது வென்றும், எப்படி யிருந்தாலும் தாதியின் மனம் நீர்க்குடத்தின்மேலிருப்பது போல் அடியிற்சொல்லும் பாட்டைப் போலிருந்தால்

" ஆக்காக்குமந்நேரம் அம்புவிழுமந்நேரம்
நோக்கிமைக்குமந்நேரம் நுண்ணறிவால்—நீக்கமற
நானெனும் போதம் நழுவிச்சிவமானார்க்கு
ஊனப்பிறப் புண்டோவினி.

என்றிருப்பதினால் நற்கதியடையலா மென்று சொன்னார். அதைக்கேட்டசுந்தரர் இப்படியிருக்க நீர் திருமணஞ் செய்து கொள்ளாமல் இருப்பது நன்மையாகத் தோன்ற வில்லை என்றனர். அதற்கு ஞானமிர்தம் தேவரீர் வாக்குக் கெதிர்வாக்குச் சொல்வதுமுண்டோ! ஆயினும் எனக்குத்

தேடும் மணமகளானவள் அடியிற் சொல்லுந் தன்மைகள் பொருந்தினவளாய் பார்த்துத் திருமணமுடித்தல் நல்லதாகத் தோன்றுகிறதென்முன்.

அதாவது பூரணச்சந்திரனையொத்தமுகமும், வில்லையொத்தபுருவமும், பெருத்தகண்ணும், கருமையானவண்டுகளை நிகர்த்த அளகபாரமும், அரளிப்பூவையொத்த நாசியும், சிறுத்தவாயும், சிவந்த அதரமும்முல்லையைபழிக்கும் பல்வரிசையும், கண்ணுடியைப்போன்ற கன்னமும், சங்கையொத்த கழுத்தும், சுகரேகைகள் நிறைந்ததும் சிறியவிரல்களையுடையதுமானகரங்களும், சிறுத்த இடையும், இளவாழைத்தண்டொத்ததொடையும், அழகியகணைக்காலும், தாமரைமலர்போன்ற பாதங்களும், மின்னலைப்போன்ற மேனியும், அன்னத்தை போன்ற நடையுமுடையவளாயும், இன்னும்;

வினைப்பகைதீர்பெரிய ரில்வாழ்விதனிற் கலந்து நின்ருலும் வேதநாதன்
றனைப்பாவி நினைத்தலென்று மொழியார்போற் கற்பில்மிக்கதையலார்தம்
மனைப்பணிகள் செய்தாலுங் கனவிலுந்தன் மனுளர்மாட்டு
நினைப்பொழியார் கணவருட னவர்மனமொன்ருய்க் கலந்து நிற்கு மாதோ..

அழகு மின்றியறமிகுமூப்பெய்திக்
கிழவனுயவன் கிட்டிய குட்டநோய்
பழ்வினைப்படி பெய்தினும் பாவைமார்
மழவனென்ன மவுணரை யெண்ணுவார்

ஊமன் பங்கு செவிடனு றப்பிலி
வாமனன் குருடனென வைகினும்
தாமவார் குழற்றைய னல்லார்தனிக்
காமனென்னக் கணவரைப் பேணுவார்

என்பதைப்போலொத்த குணமும்.

செங்காய் வரகு பைங் குரற்கொய்து
கன்று காத்துக் குன்றிலுணக்கி
ஊடுபதர் போக்கிமுன் னுதவி னோர்க்குதவி
காடுகளையிந்தனம் பாடு பார்த்தெடுத்து
குப்பைக்கீரை யுப்பின்றி வேவித்
திரவற்றுலம் விரைவுடனெடுத்து
சோறு கொண்டு மீறலடைத்து
ஒன்றுவிட் டொருபொழுது தின்றேகிடப்பினு
நன்றே தோழி யென்கணவன் வாழ்வே

என்ற எண்ணங் குடிகொண்டிருக்கவும் வேண்டுமெ ன்று சொன்னார். ஏனெனில்

காமஞ்சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பண்பே.

என்று நூல்கள் சாற்றுவதானல் முன் சொல்லிய வித மாய் பெண்ணிருப்பது நலமென வுரைத்தார்.

அவ்விதமேசெய்வோமென்றுசொல்லிஞானமிர்தத்தை யனுப்பிவிட்டார். பின்பு சிருங்கராஜனைப்பார்த்து சுந்தரர் உங்களெண்ணம்போல்முடிந்தது. இனிநீங்கள்ஞானமிதர்த் தின் யெண்ணம் போல ஒரு மணமகளைப் பாருங்களென்று சொன்னர். அதன் பேரில் சிருங்கராஜனும் தன் மந்திரியும் ஞானமிர்தத்தினிடம் விடை பெற்று அங்கதேசம் போய் பெண்பார்த்து வரும்படி மந்திரியையும்கூட மூன்று பிராம ணனையும் ராஜனுலனுப்பப்பட்டது. அதன்படியவர்கள் வெகு தேசஞ்சுற்றி பூமாதும் பாமாதும் குடிகொண்டு நீர்வ ளம் நிலவளம் முதலிய பல வளங்களுமுடையதாயும், சதுர்

வருணத்தாரும் தத்தம் நெறியினின்று பிறளாத நன்னடையுடையரா யொழுகலுமுடைய ஆக்ரா வென்னுந் தேசத்திற் போய்ச் சேர்ந்து விசாரிக்கலுற்றனர். அத்தேசத்தையாளும் மார்க்கசகாயனென்னும் அரசனுக்கு ஏகபுத்திரியாய், சகல கலாநிதியாய்ச், சாற்றுஞ்சச் சவுந்திரியமாய், சன்மார்க்க நடையுடையவளாய், ஒரு பெண்ணிருப்பதாயும், அப்பெண் ஆறு மாதத்திற்கு முன்தான் ருதுவாயிருக்கிறதென்று கேள்விப்பட்டு, அப்பெண்மணியைத் தனது சக்ரவர்த்திக்குக் கேள்க்கும்படியான உத்தேசத்துடன் மார்க்கசகாயனின் அரண்மனைக்கேகினர்.

அவர் கண்டு இவர்களை வரவேற்று வந்தகாரியத்தை வினவினர். அது கேட்ட அங்கதேசத்தவர்கள் தாங்கள் வந்திருக்கும் காரியத்தைச் சொல்ல கேட்டு பரம ஆனந்தத்தில் மூழ்கினர். என்னத்தினாலோவென்றால் முன்னமேயே ஞானமிர்த்ததின் சற்குணம் நன்னடக்கை முதலானவைகளெல்லாம் கேள்விப்பட்டிருந்ததுந் தவிர அவரைத்தனபாலனுக்கு முடி சூட்டும் போது பார்த்ததினாலும் அவ்விதச் சந்தோஷ முண்டாயின. உடனே சோதிடர்களை வரவழைத்து ஞானமிர்த்ததிற்கும் ஞானகலாவல்லிக்கும் பொருத்தம் பார்த்ததில், சகல பொருத்தமும் பொருந்தி இருக்கக்கண்ட இருபுறத்தாரும் அதிக சந்தோஷப்பட்டுமுகூர்த்தப்பட்டோலை எழுதும் படி சொல்ல ஜோசியர் ஆவணி மாதம் 18 தேதி சுக்கிரவாரம் சூரிய உதயம் அசுவதிநக்ஷத்திரத்தில் முகூர்த்தம்வைக்க, பின்பு மந்திரியும் பிராமணர்களும் தேசம்வந்து சேர்ந்தனர்.

உடனே சிருங்கராஜனும் மந்திரியும் டில்லிக்கு வந்து சுந்தரரிடம் தெரிவிக்க, அவர் சக்ரவர்த்திக்குச் சொல்ல, மந்திரி அது அறிந்து டில்லிமா நகரம் பூராவும்

பந்தற் போடும்படி திட்டம் செய்துவிட்டு; தீவட்டி, மத்தாப்பு, அதிர்வேட்டு, வாணத்தினு சுகளுக்கும் அச்சாரங் கொடுத்தபின்; பாட்டுக் கச்சேரிக்கு யாரை வரவழைக்கிற தென்று சக்ரவர்த்தியிடம் யோசிக்கலாயினர். அது கேட்டவர் நீங்களது செய்ய உத்தேசிக்கும் பக்ஷத்தில் நான் சொல்லுகிறபடி ஒரு சிறு பெண்ணை எங்கிருந்தாகிலும் பிரயாசப் பட்டுக்கொண்டு வரவேண்டுமென்று சொன்னார். அதாவது ஊரிலுள்ளவர்கள் ஒவ்வோரபிமானத்தை இட்டு பறைச்சியை விடக் கேவலமாயிருப்பவர்களுக்குப் பாப்பாத்தி என்றும், நிறத்திலாவது குணத்திலாவது ஒன்றேனும் ஒவ்வாதவளுக்குப் பாலம்மாள் என்றும், தங்கமென்றும், பொன்னம்மாளென்றும், கால்த்தம்படி பெறாத தேகத்தை உடையவளுக்குத் தனமென்றும், நாலெழுத்துக் கூடச் சேர்த்துவாசிக்கத் தெரியாதவளுக்கு வேதரத்னம் என்றும், ஞானமென்றும், யாவருங் காணக் கூசுஞ் சொரூபத்தையுடையவளுக்கு ரூபவதி என்னும், எருமைக்கன்றின் கனங்கூட இல்லாதவளுக்கு குஞ்சரமென்றும், எலும்புந்தோலுமாய்த் தோற்றுபவளுக்குப் பர்வதம் என்றும், காக்கையும் தோற்றுப்போகும்படியான கருப்பு நிறத்தையுடையவளுக்கு வெள்ளை என்றும் பெயரை வைத்துக்கொண்டு ஆட்பாதி ஆடைபாதி என்று சொல்லுமாப் போல் தங்க நகை பாதியும் பித்தளை நகை பாதியும் போட்டு நூறு ரூபாய் பெறுமான சேலை ஒன்றைக் கட்டிக்கொண்டும் சிறுக்காப் பூரவுக்கையைமாட்டிக்கொண்டும் சவ்வாத்திலகமிட்டு சிறு பெண்ணைப் போலபாவனை காட்டி சபையில் வந்து உட்கார்ந்து பக்கத்தில் நாலுபாகவதர்களை உதவியாக வைத்துக்கொண்டு நானும் பாட்டுக் கச்சேரிக்குப் போனேன் என்னையும் மெச்சிகொண்டார்கள் என்றுவெளியே பிரஸ்தாபப் படுத்தும் பேர் வழியில்லாமல்; சிறுவயதா

யும், யௌவனமாயும், மதுரமான தொனியுடையவளாயும் ஸபையைக் கௌரவப்படுத்துபவளாயும், பேராசையில் லாதவளாயும், கணக்குடன் பாடுங்காரிகையாயும், பார்த்தவர் கேட்டவர்களுக்கு அதிககளிப்பைக் கொடுக்கக்கூடியவ ளாயும் இருக்கும் ஒருபெண்ணைப்பார்த்து பாட்டுக் கச்சேரி வைத்தல் சுகமே தவிர

சிறுபஞ்சமூலம்

கல்லாதான் றூன்காணு நுட்பமுங் காதிரண்டு
மில்லாதாளெக்கழுத்தஞ் செய்தலு மில்லாதா
னெல்லாப்பொரு ளில்லார்க் கீய்ந்தளியானென்றவு
நல்லார்கள் கேட்ட பின்னகை.

மற்றப்படி செய்தல் பிறற் நகைப்பிற் கிடத்தையுண் டாக்குமென்று சொல்லினர்.

இவ்விதஞ் சொல்லக்கேட்ட மந்திரிதேசதேசங்களு கெல்லாம் ஆட்களையனுப்பி விசாரித்து நேரிற்போய்ப் பார்த்து சக்கரவர்த்தி சொல்லிய அம்சங்களெல்லாம்பொரு ந்தி இருக்கும் பக்ஷத்தில் தந்தி கொடுக்கும்படியாய்ச் சொல் லியனுப்பினர். அதன்படி சகலதேசங்களுக்குஞ்சென்று அது போல சகல வாத்தியத்திலும் சங்கீதத்திலும் கீர்த்தியடைந் துள்ள தஞ்சாவூர் ஜில்லாவுக்கு வந்து பார்க்கையில், சக்ரவர்த் தியுரைத்த அம்சம் பொருந்திய ஒரு பெண்ணிருக்கக்கண்டு, மந்திரிக்குத் தந்திகொடுக்க, அவர் அப்பெண்ணைத்திட்டம்ப ண்ணிவரும்படி பதில் தந்திகொடுத்தார். அப்படியே அப் பெண்ணைத்திட்டம் செய்து டில்லிக்குக் கூட்டிக்கொண்டு போய் திருமணம் நடக்கும் மூன்றுநாளிராத்திரியும் 9 மணி முதல் 12 மணிவரையும் பாட்டுக் கச்சேரி நடத்தி கியாதி யும் பரிசும் பெற்றுவந்தனள்.

அது எதையொத்திருந்த தென்றல் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள திருமங்கை நகரரென்று சொல்லும் பாளை யங்கோட்டையில் வசிப்பவளும் முன்னிருந்த கலெக்டரா கிய ஸ்ரீமான் பக்கிள் துரை காலத்தில் திருநெல்வேலிப் பாலங்கட்டி கிரகப்பிரவேசம் நடத்திய பொழுது அங்கு கூடியிருந்த ஆங்கிலேயர்களும் பிரபுக்களும் பிரமிக்கும் படிபாடி பரிசுபெற்ற வீணை முத்துலக்ஷிமியம்மாளின் புத்திரியாயும், பரம்பரைக்கியான வம்ஸகியாயும், சரஸ் வதியின் அவதார சொரூபியாயும், சகலருக்கு மிக்க ஆநந்தத் தைக்கொடுக்கக்கூடிய ஸ்வரமுடையவளாயும், சுதியுடன் தானகவே பாடி சபையை கௌரவப்படுத்தும்திறமுடையவ ளாயும் பேராசை இன்றிப் பெரியோர்களின் நட்பையே விரும்பும் பெருந்தகைமை யுடையவளாயும், தான் காணும் துறவிக்குப் பணிவிடைபுரியும் பண்பினை யுடையவளாயும், தருமமே தனக்கொருக் கோலாகக் கொண்டொழுகும் காத லியாயுமுள்ள, இரர்ஜம்பா ளென்பவள் இஜ்ஜில்லாவில் மகா சிவஸ்தலமாகிய திருநெல்லையப்பர் காந்திமதியம்மாள் கோவி லின் வசந்தோத் ஸவத்தன்று, அங்குவந்திருந்த வித்வான்க ளும்பிரபுக்களும் சபாஷ்! சபாஷ்!! என்று செல்லும்படி யாய்ப்பாடிக் களிப்பூட்டினதை யொத்திருந்தது.

பின்பு கலியாணத்துக்குவந்த இராஜாக்களும் பிர புக்களும் மந்திரியால் வழியனுப்பப்பட்டு தன்தன்தேச மேகினர். சக்கரவர்த்தியும்சுகமாக வாழ்ந்துவந்தனர். இப்படி இருக்கும்போது தனபாலனுக்குந் திருமணஞ் செய்யவேண் டுமென்று சக்ரவர்த்தி தன் தந்தைக்கெழுதியனுப்ப அவர் முன்போல ஆட்களையனுப்பிப் பெண்பார்க்கலாயினர். போனவர்க்ள் வங்கதேசத்தரசகுமாரியானவள் யௌவன மாயும் நற்குண நற்செய்கையை யுடையவளென்றுங் கேள்வி

ப்பட்டு அவ்விராஜனைக் கண்டுபேசி சிருங்கராஜனுக்குத் தெரிவிக்க அவர் சக்ரவர்த்தி இடம் சென்று யோஜித்து முகூர்த்த நாள் திட்டஞ்செய்து கொண்டுவரும்படி ஆக்ஞை யனுப்பினர். அதின்படி திட்டஞ்செய்து கொண்டு பெண் பேசப் போனவர்கள் அங்க தேசம் வந்து சேர்ந்தார்கள். முன் சக்ரவர்த்திக்கு டில்லி பூராவும் அலங்கரித்தது போல அங்க தேசமுழுவது மலங்கரித்து சக்ரவர்த்திக்கும் தெரிவித்தான் தன் மனைவியும் சுந்தரரும் உடனே வந்து சேர்ந்தார்கள். பத்திரிகை பெற்ற மற்ற இராஜாக்களும் வந்தார்கள். இதில் முன் சக்ரவர்த்திக்குக் திருமணம் நடந்த காலத்தில் நடந்த சகல வைபவங்களும் நடத்தப்பட்டன. பின்புகலியாண முடிந்ததும் இராஜாக்களெல்லாம் அவரவர்கள் ஊர் நோக்கிப் போயினர். சக்ரவர்த்தியும் டில்லிக்கேகி அவரும் சுந்தரரும், அங்க தேசத்தில் சிருங்கராஜனும் அவர் மனைவிமார்கள் இருவரும், தனபாலனும், நித்திய நிர்மல நிர்விகார நிர்த்தொந்த நிஷ்பிரபஞ்சப் பொருளாகிய ஜெகதீசனுடைய கிருபையினல் சுகமாக புத்ரசந்தான சுபமஸ்தும் பெற்று வாழ்ந்திருந்தார்கள்.

